யாழ்ப்பாணம், சைவபரிபாலன சபைப் பிரசுரம் — 48.



உ

# சமயகுரவர் சந்தானகுரவர் சரித்திரச் சுருக்கம்

பண்டிதர் ம. வே. திருஞானசம்பந்தப்பிள்ளை
தொகுத்தது.

1953.

3-ம் பதிப்பு] [விலை சதம் 75.



'முத்தமிழ்க் கலா வித்துவ ...ந்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அ... கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் க... கத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்... து.

27-1 1979

உ

சிவமயம்

# சமயகுரவர் சந்தானகுரவர் சரித்திரச் சுருக்கம்.




பண்டிதர்

ம. வே. திருஞானசம்பந்தப்பிள்ளை

தொகுத்தது.

இஃது

யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபையாரால்

தமது

சைவப்பிரகாச யந்திரசாலையில்

அச்சிடப்பெற்றது.

மூன்றாம் பதிப்பு.

விஜய௵ வைகாசி௴.

1953.









வெப்பொழிய மீனவற்கு
நீறளித்த வேதியன்றன்
எப்பொழுதுஞ் சிந்திப்பாம் யாம்.

பரித்தரிப்பா ரம்பாசம்
பரமசிவன் பாதந்
தரித்துயர்ந்த வாசீசர் தாள்.

பிழைப்பித்தே கூற்றுண்
முதலைவாய்ப் பிள்ளை
யழைப்பித்தார் பாதநினைப் பாம்.

பரிமேல் வந்தமலஞ்
பாடியமெய்ப் பத்தன்
இருபதமுஞ் சென்னியில்வைப் பேம்.




உ

# நூன்முகம்.

"தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே" என்பது ஔவையார் வாக்காகும்; அடியார் பெருமையைப் பாடுதற்குருகராயுள்ளவர் சேக்கிழார் சுவாமிகள் கடவுண்மாமுனிவர் போன்ற அருங்கவிப் புலவராவர்; அதனைச் செந்தமிழ் வசன நடையில் எழுதுதற்குரியவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் போன்ற அறிஞராவர்; இங்ஙனமாகவும், எங்கள் சமயகுரவர் சந்தானகுரவருடைய வரலாற்றையும் மகிமையையுஞ் சுருக்கிச் சொல்வதாகிய சமயகுரவர் சந்தான குரவர் சரித்திரச் சுருக்கம் என்னும் இந்நூலைத் தமியேன் தொகுத்துச் சொல்லத் துணிந்தமை என் அறிவு மேலீட்டினாலன்று; தொண்டர் பெருமையைச் சொல்லும் பேறு தமியேனுக்குங் கிடைக்குமே என்ற ஆசைமேலீட்டினாலேயேயாம். யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபையாரின் கேள்விக்கிசைந்து இந் நூலைத் தொகுத்தேன்; இங்ஙனந் தொகுத்தெழுதும்போது சமயகுரவருள் முதன் மூவர் வரலாற்றையும், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுநாவலரவர்கள் செய்த பெரிய புராணவசனத்தைப் பெரும்பான்மையும் ஆதாரமாகக்கொண்டு தொகுத்தேன்; இவ்வாறு தொகுத்தெழுதும்போது "முன்னோர் மொழி பொருளே யன்றி அவர் மொழியும் பொன்னேபோற் போற்றுவம்" என்றபிரகாரம், இன்றியமையாத சில இடங்களில் நாவலப் பெரியாருடைய அரிய வசனங்களையே எடுத்தாண்டுள்ளேன்; மாணிக்கவாசகசுவாமிகள் வரலாற்றை, எந்தையார் எழுதிய திருவாதவூரடிகள் புராணவிருத்தியுரையை ஆதாரமாகக்கொண்டு முந்தியே நான் எழுதி வெளியிட்ட மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரத்தைத் தழுவித் தொகுத்தெழுதினேன். சந்தானகுரவர் வரலாற்றைச் சைவத் திருவாளர் சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளையவர்கள் எழுதிய சந்தானகுரவர் வரலாற்றுச் சுருக்கத்தைத் தழுவிச் சிற்சில இடங்களில் முறையே விரித்துஞ் சுருக்கியும் தொகுத்துள்ளேன். இந்நூலிற் குற்றந் தவிர்த்துக் குணம்பெய்து வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்.




இச்சுருக்க நூல் இந்நாட்டிலுள்ள கலாசாலைகளில் ஆங்கிலம் என்னும் இரு மொழிகளிலும் பயிலும் எஸ். எஸ். ஸி. (S. S. C.) வகுப்புச் சைவ மாணவர்களுக்குச் சமய பாடங்களுளொன்றாக விதிக்கப்பெற்றுள்ளது. சுருக்கமாக எழுதப்பெற்றுள்ள இந்நூலைச் சைவ உபாத்தியாயர்கள் பயிற்றும்போது, சமயகுரவர் சந்தானகுரவர்களின் பெருமையை ஆங்காங்கு மாணவர்க்கு விரித்து விளக்கிப் புகட்டுவதே மரபாகும். தமிழ் மறையாகிய தேவார திருவாசகங்களைப் பாடியருளிய சமய குரவர் வரலாற்றையும், சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கினையுந் தந்தருளிய சந்தானகுரவர் வரலாற்றையும் ஒருவாறு கூறுதலால், சைவ மாணவர்க்குப் பயன்படுவதோடுமாத்திரமன்றிச் சைவ நன்மக்களெல்லார்க்கும் இந்நூல் பயன்படுமென்பது தமியேன் கொண்ட நம்பிக்கையாகும். [இம் மூன்றும் பதிப்பிற் சில திருத்தங்கள் செய்யப்பெற்றுள்ளன].

யாழ்ப்பாணம்,<br>
வண்மேற்கு.<br>
15—2—48.

ம. வே. திருஞானசம்பந்தன்.

---

## சரித்திர அட்டவணை.




உ
சிவமயம்

# சமயகுரவர் சந்தான குரவர் சரித்திரச் சுருக்கம்

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற் புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்"

சோழ மண்டலத்திலே பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப்பெயரையுடைய சிவஸ்தலத்திலே, பிராமண குலத்திலே, கௌணியர் கோத்திரத்திலே சிவபாதவிருதய ரென்பவர் ஒருவர் இருந்தார். தவச் செல்வியாராகிய அவர் மனைவியார் பெயர் பகவதியார். சிவபாதவிருதயர் சிவபக்தி, சைவ ஒழுக்கம் முதலியவற்றிற் சிறந்தவர். தமிழ் நாடெங்கும் அக்காலத்திலே சமணசமயமும் பௌத்த சமயமும் பரவிவர, சைவசமயம் குன்றிவரலாயிற்று. பாண்டிய நாட்டு அரசனும் சமணருடைய போதனையினாற் சைவ சமயத்தைவிட்டுச் சமணசமயத்தைக் கைக்கொண்டு ஒழுகுவானாயினான்.

இங்ஙனம் சமண பௌத்த மதங்கள் தமிழ் நாட்டிலே பரவி வரவும், சைவசமயம் குன்றி வரவும் கண்டவராகிய சிவபாதவிருதயர், பெருங் கவலை

கொண்டவராய், சீகாழிப்பதியி லுள்ள தங்கள் குல தெய்வமாகிய தோணியப்பசுவாமி பெரியநாயகி யம்மையாரோடு எழுந்தருளி யிருக்கும் திருக்கோயிலை யடைந்து, பர சமயங்களை யொழித்துச் சைவசமயத்தை நிலைநாட்ட வல்ல ஒரு சற்புத்திரரைத் தமக்குத் தந்தருள வேண்டு மென்று தோணியப்பரையும் பெரிய நாயகி யம்மையாரையும் வழிபட்டு வந்தார்.

சிலகாலஞ் செல்ல, இறைவனுடைய திருவருளினுற் பகவதியார் வயிற்றில், திருவாதிரை நட்சத்திரத் தினத்தன்று ஒரு உத்தம புத்திரர் பிறந்தார். அப் பிள்ளையார், திருவருளால் இனிது வளர்ந்து, மூன்றும் வயசை யடைந்தார். அங்ஙனமாக ஒருநாள் தந்தையா ராகிய சிவபாதவிருதயர் திருக்கோயிலிலுள்ள திருக் குளத்திலே ஸ்நானம் செய்யும்வண்ணம் புறப்பட, பிள்ளையாரும் அவருடன் செல்லப் புறப்பட்டார். தம் முடன் வரவேண்டாமென்று தடுப்பவும் பிள்ளையார் அதற்கு உடன்படாது அழுதமையினுல், தந்தையார் அவரையும் உட னழைத்துக்கொண்டு போய்த் திருக் குளத்தின் படியிலே யிருத்திவிட்டுத் தாம் நீரில் இறங்கி முழுகினுர். முழுகும்போது சில நிமிஷ நேரம் தம் தகப்பனுரைக் காணுமையினுல் பிள்ளையார் உள்ளங் கலங்கி அழும்போது மேலே பார்த்து "அம்மே! அப்பா!" என்று அழுதார். அப்பிள்ளையார் பூர்வ புண்ணியத் தோடு கூடிய தவக் குழந்தையானதினுல், பரம பிதாவாகிய தோணியப்பரும் உலக மாதாவாகிய பெரிய நாயகியம்மையாரும் இடப வாகனத்தில் எழுந்தருளிய வண்ணம் ஆகாயத்திலே அவருக்குத் தோன்றினர்.

அக் குழந்தையாருக்கு அருள்செய்யும் பொருட்டுத் தோணியப்பர் பெரிய நாயகியாரிடம் "இக் குழந்தைக்கு

ஞானப்பால் ஊட்டுதி" என்று கூற, பெரியநாயகி யம்மையார் பிள்ளையாருடைய கண்ணீரைத் துடைத்து ஞானமாகிய பாலை அக் குழந்தைக்கு ஊட்ட, தோணி யப்பர் பிள்ளையாரின் அழுகையைத் தீர்த்துப் பூரண அனுக்கிரகம் செய்தார். சிறுமையிற்றானே பரமபிதா மாதாக்களாகிய சிவன் சத்தி இருவராலும் ஆளப் பட்டமையினாலே அவர் ஆளுடைய பிள்ளையா ரென்னும் பெயரையும், சிவஞானத்தோடு சம்பந்தப் பட்டமையினாலே ஞானசம்பந்தமூர்த்தி யென்னும் பெயரையும் பெற்றார்.

தந்தையாராகிய சிவபாதவிருதயர் சிறிது பொழுதிலே தம் நியமங்களை முடித்துக்கொண்டு கரை யேறித் தம் அருமைக் குழந்தையைப் பார்த்தார்; அக் குழந்தையிடத்து ஞானப்பா லுண்ட குறியைக் கண்டு, அது எவ்வாறு வந்ததென்று வினவினார்; பிள்ளையார் கண்களி னின்றும் நீர் சொரிய, உச்சியின்மேல் எடுத்த ஓர் திருவிரலினாலே சுட்டி, ஆகாயத்திலே பெரிய நாயகியாரோடும் இடபாரூடராய் எழுந்தருளிய தோணியப்பசுவாமியைக் காட்டி:—

திருச்சிற்றம்பலம்

"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசியென் னுள்ளங்கவர் கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தவருள் செய்த
பீடுடைய பிரமாபுர மேவியபெம் மானிவனன்றே."

திருச்சிற்றம்பலம்

என்று பாடத் தொடங்கியருளினார். உடனே சிவபாதவிருதயர் தமது குழந்தையாருக்கு ஞானமுதிக்க அனுக்கிரகம் செய்தது தோணியப்பசுவாமியும், பெரிய

நாயகியம்மையாருமே என்ற உண்மையை யுணர்ந்து வணங்கித் துதித்துத் தம் குழந்தையையும் உடன் அழைத்துக்கொண்டு திருக் கோயிலுட் சென்று இறைவனையும் தேவியையும் வணங்க, பிள்ளையாரும் வணங்கித் துதித்தார். வணங்கித் துதித்தபின் சிவபாத விருதயர் குழந்தையாருடன் தம் திருமாளிகைக்கு மீண்டார்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார், அடுத்தநாள் அதி காலையில் ஆலயத்திற் சென்று பரமசிவனையும் பார்வதி யாரையும் வணங்கித் துதித்து அருள்பெற்று, திருக்கோ லக்காவென்னும் திருப்பதியை யடைந்து, திருக்கோயிலை வலஞ்செய்து முன்னின்று, கையினாலே ஒத்தறுத்துத் திருப்பதிகம் பாடத் தொடங்கினர். பாடும்பொழுது, சிவபெருமானுடைய திருவருளினாலே ஸ்ரீபஞ்சாக்கரம் எழுதப்பட்ட பொற்றாளம், உலகமெல்லாம் உய்யும்படி பிள்ளையாரது திருக்கரத்தேவந் திருந்தது. பிள்ளையார் அதைக்கண்டு, திருவருளைவியந்து களிகூர்ந்து ஏழிசை யும் தழைத்தோங்கத் திருப்பதிகத்தைப்பாடி முடித்து, திருக்கடைக்காப்புச் சாத்தியின்றார். அவர் பாடும் பொழுது, விண்ணுலகமும் அதிசயிக்கும்படி ஓங்கிய அதிமதுரநாதத்தை நோக்கித் தும்புரு நாரதர் முத லாகிய இசைவல்லவர் தோத்திரஞ்செய்து பூமாரி பொழிந்தார்கள். வேத சிவாகமங்கள் வாழும்படி திருவவதாரஞ் செய்தருளிய பிள்ளையார் மீண்டு சீகாழிக்குப் போம்படி நடந்தார். நடக்கும்பொழுது சிவபாதவிருதயர் மனந்தரிக்கலாற்றாராக, பிள்ளையார் தந்தையாரது தோளில் எழுந்தருளிச் சீகாழியி லிருக் கின்ற திருக்கோயிலை யடைந்து வலஞ்செய்து சந்நி தானத்திலே நின்று திருப்பதிகம் பாடி வணங்கிக்

கொண்டு, தம்முடைய திருமாளிகையை யடைந்து, அந்தச் சீகாழியில் வாழுகின்றவர்க ளெல்லோரும் ஈடேறும் பொருட்டுத் தம்முடைய இளந் திருக்கோலக் காட்சி வழங்கி வீற்றிருந்தருளினர்.

அப்படி யிருக்கும்பொழுது அவருடைய தாயா ராகிய பகவதியார் பிறந்த வூராகிய திருநனிப்பள்ளியில் இருக்கின்ற பிராமணர்கள் எல்லாரும் பெருமகிழ்ச்சி யோடு அவ் விடத்திற்கு வந்து சேர்ந்து, அவரை வணங்கித் தங்கள் திருப்பதிக்கு வந்தருளி அங்குக் கோயில் கொண்டருளிய பெருமானை வணங்கி அப் பெருமான்மீது தேவாரத் திருப்பதிகம் பாட வேண்டு மென்று கேட்டார்கள். பிள்ளையார் அவர்கள் கேள்விக் கிசைந்து அவர்களுடன் புறப்பட்டு நடந்து செல்ல, அதனைக் கண்ட அவர் தகப்பனாராகிய சிவபாதவிருதயர் தம் பிள்ளை நடந்துசெல்ல மனஞ் சகியாதவராய் அவரை யெடுத்துத் தம் தோளில் வைத்துச் சுமந்து கொண்டு செல்வாராயினர். பிள்ளையார் திருநனிப் பள்ளியை யடைந்து அங்குள்ள திருக்கோயிலில் எழுந்தருளிய பெருமானையும், பிராட்டியாரையும் வணங்கித் தேவாரத் திருப்பதிகம் பாடித் துதித்துச் சிலநாள் அத் தலத்தில் எழுந்தருளி யிருந்தார்.

பின்னர் அத் திருப்பதியை விட்டகன்று வரும் மார்க்கத்தில், தலைச்சங்காடு, திருவலம்புரம், பல்லவ னீச்சரம், திருச்சாய்க்காடு, திருவெண்காடு, திருமுல்லை வாயில் என்னும் தலங்களையடைந்து, சுவாமி தரிசனஞ் செய்து திருப்பதிகங்கள் பாடி மீண்டு சீகாழிப் பதியை யடைந்து நாள்தோறும் தோணியப்பரை வணங்கித் துதித்துக்கொண்டு தம் மாளிகையி லிருந்தார். இருக்கும்

காளில் திருமயேந்திரப்பள்ளி, திருக்குருகாவூர் முதலாகிய ஸ்தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடினர்.

அதன் பின்னர்ச் சிதம்பரத்திற்குச் சமீபமாக வுள்ள திருஎருக்கத்தம்புலியூரில் வாழ்பவராகிய திருநீல கண்டபெரும்பாணர் ஆளுடையபிள்ளையாரின் பெருமை களைக் கேள்வியுற்றுத் தமது மனைவியாராகிய மதங்க சூளாமணியாருடன் சீகாழியை யடைந்து பிள்ளையாரை வணங்கி, அவருடன் கேண்மைபூண்டு, பிள்ளையார் செல்லும் தலங்கள்தோறும் தாமும் சென்று, அவர் ஆங்காங்குப்பாடும் தேவாரத் திருப்பதிகங்களைத் தாழும் உடனுக்குடன் யாழில் ஏற்று வாசித்துவருவாராயினர். பிள்ளையார் சிதம்பரம் முதலிய பல திருப்பதிகளைத் தரிசித்துக்கொண்டு திருநெல்வாயிலரத்துறை என்னும் திருப்பதியைத் தரிசிக்க விரும்பித் தமது தந்தையார் தோளினின்றும் இறங்கி நடந்து செல்வாராயினர்.

நடந்து சென்றதால் அலுப்படைந்து மார்க்கத்தி லுள்ள மாறன்பாடியென்னும் திருப்பதியில் அயர்ச்சி யுற்று ஐந்தெழுத்தை ஓதிக்கொண்டு அங்கிருந்தார். அதனைத் திருவுளத்திற் கொண்ட பரமேசுவரன் அன் றிரவு திருநெல்வாயிலரத்துறையில் வாழும் அன்பர்கட் குக் கனவிலே தோன்றி அங்குள்ள திருக்கோயிலில் முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னங்கள் வைத்திருப்பதாகவும், அவைகளைப் பிள்ளையாரிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும்படியும் கட்டளை செய்தருளி னர்; அவ்விரவே ஆளுடைய பிள்ளையாருக்கும் சொப் பனத்திற் றோன்றி அப்பொருள்களை ஏற்றுக்கொள்ளும் படி தெரிவித்தருளினர்; இரவு முடிதலும் திருநெல் வாயிலரத்துறையிலுள்ள அன்பர்கள் கோயிலுட் சென்று முத்துச்சிவிகை, குடை, சின்னங்கள் வைக்கப் பெற்றிருப்பதைக் கண்டு, அற்புதமடைந்து, இறைவர்

திருவருளைப் பாராட்டி அவைகளைப் பத்தியோடு எடுத்துக் கொடுவந்து பிள்ளையார் முன்னிலையில் வைத்துத் தங்களுக்கு இறைவரிட்ட ஆஞ்ஞையையும் விண்ணப்பஞ் செய்தனர். பிள்ளையாரும் சிவபிரான் தம்மீது வைத்த கருணையைப் பாராட்டி உள்ளமுருகி "எந்தையீசனெம் பெருமான்" என்னும் தேவாரப் பதிகத்தைப் பாடி அச்சிவிகையின்மேல் ஏறியருளினுர். பரிசனர்கள் குடை சின்னங்களைத் தாங்கி நின்றனர். முத்துக்குடை நிழற்ற, சின்னங்கள் ஒலிப்ப, ஆளுடையபிள்ளையார் முத்துச் சிவிகையின்மேல் எழுந்தருளிப் பல தலங்களையடைந்து தரிசித்து ஆங்காங்குத் தேவாரத் திருப்பதிகங்களையும் பாடிக்கொண்டு மீண்டு சீகாழியை யடைந்தார்.

பின்னர் உபநயனம் செய்தற்காகிய பருவத்தைப் பிள்ளையார் அடைதலும், அவருடைய தந்தையார் வேதவிதிப்படி உபநயனம் செய்தலாகிய பூணூற் சடங்கை நிறைவேற்றி வைத்தார். வேதங்களின் முடிந்த, உண்மைப்பொருளை ஓதாதுணர்ந்த திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமது உபநயன காலத்தில் அங்கேவந்த அந்தணர்களுக் கெல்லாம் அவர்களுடைய உள்ளத்தில் நிகழ்ந்த சந்தேக விபரீதங்களை நீக்கி ஐந்தெழுத்தின் பெருமையை உபதேசித்து "துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினும்" என்னும் பஞ்சாக்கரத் திருப்பதிகத்தைப் பாடியருளினுர்.

இவ்வாறாக ஆளுடைய பிள்ளையாரின் பெருமைகளையும் அற்புதச் செயல்களையும் சிவனடியார்மூலம் கேட்டறிந்த திருநாவுக்கரசுசுவாமிகள், அவரைத் தாம் நேரே தரிசிக்க ஆவல்கொண்டு சீகாழிப்பதியை நோக்கி எழுந்தருளி வருதலும், அதனையறிந்த ஆளுடைய

பிள்ளையார் பெருமகிழ்ச்சியுற்று அவரை யெதிர்கொண்டழைத்து உபசரித்தார்; அப்பர்சுவாமிகள் ஆளுடைய பிள்ளையார் என்னும் இருவரும் சீகாழித் திருக்கோயிலை யடைந்து தோணியப்பசுவாமியை வணங்கித் துதித்துச் சிலநாள் அங்கிருந்தனர். பின்னர் அப்பர்சுவாமிகள் பல திருப்பதிகளைத் தரிசிக்கவேண்டி, ஆளுடைய பிள்ளையாரிடம் விடை பெற்றுக்கொண்டு பரிவுடனகன்றார். திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் சிவனடியார் பலர் புடைசூழப் புறப்பட்டுப் பலதலங்களைத் தரிசித்துத் திருப்பதிகங்களையும் பாடிக்கொண்டு திருப்பாச்சிலாச்சிராமம் என்னும் திருப்பதியை யடைந்தார். அங்குவாழும் கொல்லி மழவனென்னும் அரசன் பிள்ளையார் வரவை யறிந்து, பல வரிசைகளோடும் அவரை எதிர்கொண்டு வணங்கி அங்குள்ள திருக்கோயிலுக் கழைத்துச் சென்றான். பிள்ளையார் சுவாமி சந்நிதியிற் சென்று பணிந்து திருக்கோயிலை வலம் வரும்போது, வீதியில் முயலகனென்னும் கொடிய நோயினாற் பீடிக்கப்பட்டு அறிவுசோர்ந்து தரையிற் கிடக்கும் ஓர் கன்னிகையைக் கண்டு "இவள் யார்? இவளைப் பீடித்து வருத்தும் நோய் யாது?" எனக் கொல்லிமழவனை வினவினார். கொல்லிமழவன் அவள் தன் குமாரியென்றும், முயலகனென்னும் கொடியநோய் அவளைப் பீடித்து வருத்துகிறதென்றும், அந்நோயை நீக்க மார்க்கம் புலப்படவில்லை யென்றும் பணிவுடன் விண்ணப்பஞ் செய்தான். அந்த அரசனுடைய முறையீட்டைக் கேட்டருளிய ஆளுடையபிள்ளையார் இறைவன் திருவருளை நினைந்து "துணிவளர் திங்கள்" என்னும் பதிகத்தைப் பாடி அந்த அரசகுமாரியின் நோயை நீக்கிவிட, அவள் தன் பிதாவுடன் ஆளுடைய பிள்ளையாரை வணங்கினாள்.

பின்னர் ஆளுடைய பிள்ளையார் பல தலங்களை வணங்கித் தேவாரத் திருப்பதிகம் பாடி, திருக்கொடி மாடச் செங்குன்றூர் என்னும் திருப்பதியை யடைந்தார். அவ்வூரிலே முன்பனிக் காலத்தில் விஷ சுரநோய் வருவதுண்டு; பிள்ளையார் அக் காலத்தில் ஆங்கு எழுந்தருளியமையால், அவ் விஷநோய் பிள்ளையாருடன் சென்ற அடியார்களையும் பரிசனர்களையும் பீடித்தது; அதனைத் திருவுளத்திற் கொண்ட பிள்ளையார் "அவ்வினைக் கிவ்வினை" என்னுந் தேவாரப் பதிகத்தைப் பாடி, இறைவனருளால் தம்முடன் வந்த அடியார் பரிசனர்களைப் பீடித்த அவ் விஷ சுரத்தை யகற்றியதோடமையாது, அவ்வூரிலுள்ள மக்களை அந்நோய் எக் காலத்தினும் அணுகவொட்டாது தடுத்தருளினர்.

செங்குன்றூர்த் தலத்தைத் தரிசித்துக் கொண்டு அவ்விடம் விட்டகன்று, வேறு பல தலங்களையடைந்து ஆங்காங்குக் கோயில் கொண்டருளிய இறைவனை வணங்கித் தேவாரத் திருப்பதிகங்களைப் பாடித் துதித்துத் திருப்பட்டீச்சுரம் என்னுந் தலத்தை யடைந்தார். அங்கே அவ்வேளையில் வெயிலின் வெம்மை அதிகமாக விருந்தமையால், இறைவனுடைய திருவருளால் ஒரு சிவபூதம் முத்துப் பந்தரொன்றைத் தாங்கிக் கொண்டுவந்து அந்தரத்தில் இறங்கவிட, ஆளுடைய பிள்ளையாரின் பரிசனர்கள் அப் பந்தரை ஏற்று, பிள்ளையாரை அந் நிழலின்கீழ் எழுந்தருளிவரச் செய்தனர். பரமசிவன் தம்மீது பாராட்டும் திருவருட் பெருமையை யுணர்ந்த பிள்ளையார் "பாடன் மறைசூடன்" என்னும் திருப்பதிகத்தைப் பாடிப் பல தலங்களைத் தரிசித்துத் தேவாரப் பதிகங்களைப் பாடித் திருவாவடுதுறை யென்னும் திருப்பதியை யடைந்தனர்.

ஆவடுதுறையில் எழுந்தருளிய பெருமானுரைத் தரிசித்துத் திருப்பதிகங்களைப் பாடி அங்குள்ள திருமடத்திலே அடியவரோடும் பரிசனரோடும் பிள்ளையார் எழுந்தருளியிருக்கும்நாளில், அவருடையதந்தையாராகிய சிவபாதவிருதயர் அங்கே வந்து வேள்வி செய்வதற்குத் தமக்குப் பொருள் தரும்படி கேட்க, பிள்ளையார் "அந்தமில பொருளாவன ஆவடுதுறையுள், எந்தையார் அடித்தலங்களன்றோ" என்னுங் கருத்தமைந்த "இடரினுந் தளரினும்" என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினர். ஆவடுதுறைப் பெருமா னருளினல், உடனே ஒரு சிவபூதம் தோன்றி, ஆயிரம்பொன் கொண்ட ஒரு பொன் முடிப்பை அவ் வாலயத்திலுள்ள பீடத்தின் மேல் வைத்து "நல்வாக்கால் உய்த்த இக்கிழி பொன்னுலவாக்கிழி; உமக்கு நித்தனுர் அருள் செய்தது" எனக்கூறி மறைந்தது. அப்பொற்கிழியைப் பிள்ளையார் ஏற்றுக் "தீதுநீங்க நல்வேள்வி செய்க" என்று தந்தையாரிடம் கொடுக்க, அவர் அதனைப் பெற்றுக்கொண்டு பிள்ளையாரை அரிதிற் பிரிந்து தந் திருப்பதிக்கு மீண்டார்.

ஆவடுதுறை யிறைவர் அருள்பெற்றுப் பிள்ளையார் அத்தலத்தை விட்டகன்று பல தலங்களை வணங்கித் துதித்து, திருநீலகண்டப் பெரும்பாணனுரின் தாயார் பிறந்த தலமாகிய தருமபுரத்தை அடைந்தார். அத்தலத்தின்கண்ணேே பாணனுருடைய உறவினராய் உள்ளவர்கள் அப் பாணனுரது திருத்தொண்டைப் பாராட்டி "திருப்பதிகத்திற் கிளர்ந்தவோசை, அளவுபெறக் கருவியில் நீர் அமைத்தி யற்றுமதனுலே யகிலமெல்லாம் வளர இசைநிகழ்வ" தென இயம்பினர்கள். தம் சுற்றத்தார் அங்ஙனஞ் சொல்லக் கேட்ட திருநீல

கண்ட யாழ்ப்பாணர் உள்ளம் நடுங்கிப் பிள்ளையாருடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி யெழுந்து நின்று "சுவாமீ, திருப்பதிகவிசை அளவுபடாத தன்மையை இவர்களேயன்றி உலகத்திலுள்ள மற்றை யாவரும் அறிந்து உண்மையை யுணர்ந்து உய்யும் பொருட்டுத் தேவரீர் ஒரு திருப்பதிகம் பாடியருளுவீராகில், அடியேன் அதனிசை யாழிலே அடங்காமையைக் காட்டப் பெறுவேன்" என்றார்.

அப்பொழுது பிள்ளையார் பரமசிவனை வணங்கி, திருப்பதிகத்தின் உண்மையைப் பூமியிலுள்ள மக்களின் கண்டத்திலும் யாழ் முதலிய இசைநாற் கருவிகளிலும் அடங்காமையை விளக்கிவைக்கும் பொருட்டு "மாதர் மடப்பிடி" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். திருநீலகண்டப்பெரும்பாணர் அத்திருப்பதிக இசையை, தம்முடைய யாழ் நரம்பிலே முன்போல இட்டு வாசிக்கப் புக, அது அதனிடத்தே அடங்கிற்றில்லை! அப்பொழுது திருநீலகண்டப் பெரும்பாணர் அதனையிட்டு அச்சங் கொண்டு பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து எழுந்து, "சுவாமி அருளிச்செய்த திருப்பதிகத்தி னிசையை யாழிலே ஏற்பேன் என்று சொல்லப் பண்ணியது இந்த யாழன்றோ" என்று அதனை உடைக்க ஓங்கினர். உடனே பிள்ளையார் தடுத்தருளி, "அன்பரே, நீர் இந்த யாழைத் தருதிர்" என்று வாங்கிக்கொண்டு "நீர் இந்த யாழை முரிப்ப நினைத்தது என்னை! பரமசிவனும் பார்வதியம்மையாரும் அருளிச்செய்த திருவருளின் பெருமை யெல்லாம் இந்தக் கருவியில் அளவு படுமோ! மனசினாலும் அளவுபடாத இசைப் பெருமை, செய்கையினால் அளவுபடுமோ! அளவுபடாதே; நீர் இந்த யாழைக்கொண்டே சுவாமியுடைய திருப்பதிக

இசையை இயன்றமட்டும் இதில் அமைத்துவாசியும்" என்று சொல்லி, திருநீலகண்டப் பெரும்பாணர் கையிலே யாழைக் கொடுத்தருளினர். பெரும்பாணர் பிள்ளையாரைத் தொழுது யாழை வாங்கிச் சிரமேற் கொண்டார்.

சிலநாட் சென்றபின், பிள்ளையார் தருமபுரத்தை அகன்று, திருநள்ளாற்றை அடைந்து திருக்கோயிலிற் பிரவேசித்துச் சுவாமியை வணங்கி "போகமார்த்த பூண்முலையாள்" என்னும் திருப்பதிகத்தை யாழ் நரம்பிலே இசைகூடும்படி பாடிமுடித்து, புறத்தணைந்து பெரும்பாணரை நோக்கி யாழில் இட்டு வாசிக்கும்படி பணித்து, தாம் திருத்தாளங் கொண்டு பாடினர். பெரும்பாணர் அத் திருப்பதிக இசையை யாழில் இட்டு வாசித்தார். அது கேட்டுப் பிள்ளையார் திருவுள மகிழ்ந் தருளினர். பின் பிள்ளையார் திருநள்ளாற்றி னின்றும் நீங்கி, திருச்சாத்தமங்கையைச் சமீபித்து, அத்திருப்பதியி னின்றும் வந்து தம்மை எதிர்கொண்டு வணங்கிய திருநீலநக்கநாயனரோடு சென்று, அயவந்தி யென்னும் ஆலயத்தை யடைந்து சுவாமி தரிசனஞ் செய்து கொண்டு, திருநீலநக்க நாயனருடைய திருமாளிகைக்குப் போய்த் திருவமுது செய்து, அன்றிரவு அங்கே பள்ளி கொண்டார். அடுத்த நாட் பிராதக் காலத்தில் திருநீலநக்க நாயனரோடும் அயவந்தியிற் சென்று, சுவாமி தரிசனஞ்செய்து திருநீலநக்க நாயனரைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடியருளினர்.

அதன் பின்னர் ஆளுடைய பிள்ளையார் திருநாகைக் காரோணம், கீழ்வேளூர் முதலிய தலங்களை வணங்கச் சென்றருளினர். அங்ஙனமாக, திருச்செங்காட்டங்

குடியில் வாழும் சிறுத்தொண்டநாயனூர் பிள்ளையாரின் மகத்துவத்தைக் கேள்வியுற்றுச் சென்று தரிசித்து வணங்கி அவரைத் திருச்செங்காட்டங்குடிக்கு அழைத்துச் சென்றார். திருஞானசம்பந்தப்பிள்ளையார் சிறுத்தொண்டநாயனூருடன் அங்குள்ள கணபதீச்சரம் என்னும் திருக்கோயிலை வணங்கிச் சிறுத்தொண்ட நாயனூரின் திருத்தொண்டைப் பாராட்டித் தேவாரத் திருப்பதிகம்பாடி, அந் நாயனூருடைய வீட்டிற்குச் சென்று திருவமுது செய்து சிலநாள் அங்கெழுந்தருளி யிருந்தார். பின்னர்த் திருமருக லென்னும் திருத்தலத்தை யடைந்து சுவாமி தரிசனஞ்செய்து தேவாரம்பாடி அங்குள்ள திருமடத்தில் எழுந்தருளி யிருந்தார்.

அந் நாளிலே ஒரு வணிகன் தான் மணஞ்செய்ய நிச்சயித்த ஒரு கன்னிகையுடன் வழிச்செல்லும்போது, இராக் காலமாதலும் திருமருகற் கோயிலுக்குப் புறத்திலே யுள்ள ஒரு திருமடத்திலே படுத் துறங்கினன். கன்னிகையும் அம் மடத்திற்றனே வேறொரு புறத்தே படுத் துறங்கினள். துயிலும்போது அவ் வணிகனை ஒரு நாகந் தீண்ட அவன் இறந்தான். அதனை யுணர்ந்த கன்னிகை பெரிதும் மனமுடைந்து, அயலே வீழ்ந்து புரண்டு புலம்பினள். புலரிக் காலத்திலே தம் திரு மடத்தி லிருந்து மருகற் பெருமானைத் தரிசனஞ் செய்யும்படி வந்தருளும் ஆளுடையபிள்ளையார், அக் கன்னிகை புலம்பும் ஒலியைக் கேட்டுத் திருவுள மிரங்கி அவளுக்கு அருள் செய்யும் வண்ணம் அடியார்களோடு அங்குச் சென்று அவளை நோக்கி, "பெண்ணே! அஞ்சற்க! உனக்கு நேர்ந்த ஆபத்தைச் சொல்" என வினவியருளினர். கன்னிகை ஒருவாறு மனந்தேறிப் பிள்ளையாருடைய திருவடியிலே பஞ்சாங்க

மாக வீழ்ந்து வணங்கி, எழுந்து ஒதுங்கி நின்று கண்களின் நீர் சொரியப் பின்வருமாறு முறையிட்டாள்:

"வைப்பூரில் இருக்கின்ற தாமனென்னும் பெயரை யுடைய என் பிதாவுக்குப் புத்திரிகள் எழுவர். அவர் களில் என்னை யொழிய மூத்தோர் அறுவரையும் தம் மருகராகிய இவருக்கே விவாகஞ் செய்து கொடுப்பேன் என்று என் தகப்பனுர் சொல்லிச் சொல்லி, பிற ரிடத்திலே திரவியம் வாங்கிக்கொண்டு, அவர்களுக்கு விவாகஞ்செய்து கொடுத்துவிட்டார். அதுகண்டு மன வருத்தமுற்ற இவருக்கே நான் மனைவியாதல் வேண்டும் எனநினைத்து, என் தாய்தந்தையர் அறியாமல் இவரையே சார்ந்துவந்தேன்; சுவாமி, இவர் பாம்புதீண்டி இறந்தார். அடியேன் கடல்நடுவே கலங் கவிழப்பெற்றுர்போற் கலங்குகின்றேன்; தேவரீர் எழுந்தருளி வந்து, அடியே னுடைய துன்பமெல்லாம் நீங்க அருள்செய்வீர்" என்றிரந்தாள். அக்கன்னிகையின் வரலாற்றைக் கேட்ட பிள்ளையார் திருவுளமிரங்கி, விஷம்நீங்கும் பொருட்டுத் திருமருகற்பெருமான்மீது "சடையாயெனுமால்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினுர். உடனே வணிகன் விடந்தீர்ந்து எழுந்து பிள்ளையாரை நமஸ்கரித்தான். அதுகண்ட திருத்தொண்டர்க ளெல்லாரும் ஆரவாரித் தார்கள். கன்னிகை மனமகிழ்ந்து பிள்ளையாருடைய திருவடியிலே விழுந்து வணங்கினுள். பிள்ளையார் அக் கன்னிகையை வணிகன் மணஞ் செய்யும்படி கட்டளை செய்து அவர்களுக்கு விடைகொடுத்து அங்கே எழுந் தருளி யிருந்தார். இருக்குநாளிலே, சிறுத்தொண்ட நாயனுர் வந்து பிரார்த்திக்க, பிள்ளையார் மீண்டும் திருச்செங்காட்டங்குடிக்கு எழுந்தருள விரும்பி அடியா ரோடும் அத்திருமருகற் கோயிலிற் சென்று வணங்க,

பரமசிவன் தாம் திருச்செங்காட்டங் குடியி லிருக்கின்ற திருக்கோலத்தை, அவருக்கு அங்கே காட்டியருளினூர். பிள்ளையார் அதுகண்டு மனமகிழ்ந்து "அங்கமும் வேதமு மோது நாவர்" என்னும் திருப்பதிகம் பாடி, அந்தத் திருப்பதியிலே எழுந்தருளி யிருந்தார்.

பின்னர் அத்திருப்பதியை விட்டகன்று தம்மைத் தொடர்ந்த சிறுத்தொண்டநாயனுருக்கு அனுமதி கொடுத்து, பல சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, திருப்புகலூருக் கணித்தாக வரும்போது, அப்பதியி னின்றும் வந்த முருகநாயனுர் என்னும் அடியவர் வந்து தம்மை யுபசரிக்க, அவருடன் சென்று திருப்புக லூர்ப்பெருமானை வணங்கித் தேவாரம்பாடி, அங்குள்ள முருகநாயனுருடைய திருமடத்திற் சிலநாள் எழுந்தருளி யிருந்தார். இருக்குநாளில் வர்த்தமானீச்சரத்தை வணங்கி முருகநாயனுருடைய திருத்தொண்டைச் சிறப்பித்துத் தேவாரம் பாடினுர்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் அங்கே எழுந்தருளி யிருக்குங் காலத்திலே, திருநாவுக்கரசுநாயனுர் திருவா ரூரை வணங்கிக்கொண்டு திருப்புகலூரை வணங்கற்கு அடியார்களோடும் எழுந்தருளுஞ் செய்தியைக் கேட்டு, பேராசையுடன் அவரை யெதிர்கொள்ளும் பொருட்டுத் திருக்கூட்டத்தோடும் திருப்புகலூரின் எல்லையைக் கடந்துசென்ருர். திருநாவுக்கரசுநாயனுரும் பிள்ளையாருக்கு எதிரே வந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கி, நல்வரவுவினவி மகிழ்ந்தார்கள். அப் போது பிள்ளையார் அப்பமூர்த்தியை நோக்கி, "அப்பரே, நீர் வரும்நாளிலே திருவாரூரிலேநிகழ்ந்த சிறப்பைச் சொல்லும்," என்று கேட்க, அப்பமூர்த்தி திருவா

திரைச் சிறப்பைத் திருப்பதிகத்தினலே சொல்லி யருளினர். பிள்ளையார் அதுகேட்டு, "நான் திருவா ரூருக்குப் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு மீண்டு இவ்விடத்திற்கு வந்து உம்முடன் இருப்பேன்" என்று சொல்லியருளினர். அப்பமூர்த்தி திருப்புக லூருக்குப் போக, திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் புறப்பட்டுத் திருவிற்குடிவீரட்டத்தை வணங்கிக் கொண்டு, திருவாரூரை அடைந்து, வன்மீகநாதரை வணங்கித் திருப்பதிகம்பாடி, அப்பதியில் எழுந்தருளி யிருந்தார். அங்குள்ள அரநெறி யென்னும் ஆலயத் தையும் காலந்தோறும் பணிந்தார். அங்கெழுந்தருளி யிருக்கும்நாளிலே திருவலிவலம், திருக்கோளிலி முதலிய ஸ்தலங்களுக்கும் போய், சுவாமிதரிசனஞ் செய்து, மீண்டும் அத்திருவாரூரில் வந்து இருந்தார்; சிலநாளான பின், திருநாவுக்கரசுநாயனரைக் காணுதற்கு விரும்பி, திருவாரூரை நீங்கித், திருப்பனையூரிற் சென்று, சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு திருப்புகலூரை யடைந்து, அப்பதியினின்றும் வந்து தம்மை எதிர்கொண்ட அப்ப மூர்த்தி, முருகநாயனர் முதலாகிய திருத்தொண்டர்க ளோடும்போய், சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு, முருகநாயனருடைய திருமடத்தை அடைந்து, அங்கே இருந்தருளினர். இருக்குநாளிலே, திருநீலநக்கநாயனரும், சிறுத்தொண்டநாயனரும் அவ்விடத்திற்கு வந்து அவரோடு இருந்தார்கள்.

சிலநாட் சென்றபின், ஞானசம்பந்தரும் நாவுக் கரசரும் ஏனைய சிவஸ்தலங்களைத் தரிசிக்க விரும்பிப் புறப்பட்டு, முருகநாயனரை அங்கே இருக்கவும், திருநீலநக்கரையும், சிறுத்தொண்டரையும் தத்தம் ஊருக்குச் செல்லவும் அனுமதிசெய்து செல்வாராயினர்;

பிள்ளையார் அப்பமூர்த்தியைவிட்டுப் பிரியாமல், முத்துச் சிவிகை பின்வர வழிக்கொள்ளும் பொழுது, அப்ப மூர்த்தி பிள்ளையாரை நோக்கி, "சிவபெருமான் தேவரீருக்கு அருளிச்செய்த இம்முத்துச் சிவிகையின் மேல் எழுந்தருளும்" என்று சொல்ல, பிள்ளையார் "நீர் அடியார்களோடும் எங்கே முன்போவீரோ, அங்கே நான் பின் வருவேன்" என்றார். அப்பமூர்த்தி, தேவரீர் அருளிச்செய்தபடியே செய்வேன்" என்று சொல்லிக் கொண்டு அன்றுமுதல் அவருடன் செல்லுநாள் எல்லாம் அப்படியே செய்வாராகி, நடந்து முன்னே அடியாரோடும் திருவம்பருக்குச் சென்றார். பிள்ளையார் பரமசிவனுடைய திருவருள்வழியே நிற்பாராகி, முத்துச் சிவிகையில் ஏறி, திருப்புகலூரைக் கடந்துசென்று, "அப்பமூர்த்தி எங்கேசென்றார்" என்று வினுவிப்போய், திருவம்பரை அடைந்து, மாகாளத்தில் இருக்கின்ற சுவாமியை வணங்கித் திருப்பதிகம்பாடி, அப்பமூர்த்தி யோடும் அந்தத் திருப்பதியில் எழுந்தருளி யிருந்தார். அங்கே கோச்செங்கட்சோழநாயனர் செய்த பெருந் திருக்கோயிலை அடைந்து, சுவாமிதரிசனஞ் செய்து, அந் நாயனுரைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடினர். சிலநாட் சென்றபின், திருவம்பரை நீங்கி, அப்பமூர்த்தி யோடு திருக்கடவூரைச் சமீபிக்க, அங்குநின்று வந்து எதிர்கொண்டு வணங்கிய குங்குலியக்கலய நாயனர் முதலாகிய அடியார்களோடு, திருவீரட்டானத்திற் சென்று சுவாமிதரிசனஞ் செய்து, திருப்பதிகம் பாடி, அக் குங்குலியக்கலயநாயனர் வீட்டில் திருவமுதுசெய்து, திருக்கடவூர் மயானத்தையும் வணங்கிக்கொண் டிருந்தார்.

சிலநாளானபின் திருக்கடவூரை நீங்கி, திருவாக் கூர், திருமீயச்சூர், திருப்பாம்புரம் என்னுந் தலங்களை

வணங்கிக்கொண்டு, திருவீழிமிழலையை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடி, புறத்தணைந்து அப்பமூர்த்தி ஒரு திருமடத்தை யடைய, தாம் வேறொரு திருமடத்திலே போயிருந்தார். அவ்விருவரும் பேணுபெருந்துறை, திலதைப்பதி என்னுந் தலங்களுக்கும் போய்த் தரிசனஞ் செய்துகொண்டு, மீண்டு திருவீழிமிழலையில் வந்திருந்தார்கள். இருக்குநாளிலே, சீர்காழியிற் பிராமணர்கள், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரைக் காணல்வேண்டும் என்னும் ஆசை செலுத்த, திருவீழிமிழலையை அடைந்து தங்களை எதிர்கொண்ட அவ்வூர்ப் பிராமணர்களோடு, திருக்கோயிலிலே போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, அந்நாயனார் எழுந்தருளியிருக்கும் திருமடத்திற் சென்று, அவரை நமஸ்கரித்து, "சுவாமீ, தேவரீர் அடியேங்களோடு சீர்காழிக்கு எழுந்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். பிள்ளையார் அதற்கிசைந்து திருவீழிமிழலைப் பெருமானை வணங்கிக்கொண்டு சீகாழிப் பதிக்குப் போதற்கு உடன்படுதலும், தோணியப்பர் அன்றிரவு பிள்ளையாருக்குக் கனவிலே தோன்றி, "நாம் திருத்தோணியில் வீற்றிருக்குங் கோலத்தை இத் திருவீழிமிழலையிலுள்ள விண்ணிழிந்த விமானத்திலே காட்டுவோம்; காண்" என்று சொல்லி மறைந்தருளினார். பிள்ளையார் விழித்து எழுந்து, திருக்கோயிலிற் சென்று, அங்கே சுவாமியைத் தாம் முன்னே திருத்தோணியிற் கண்டபடியே கண்டு, திருவுள மகிழ்ந்து, "மைம்மரு பூங்குழல்" என்னும் வினாவுரைப் பதிகம் பாடியருளினார். பின், சீர்காழிப் பிராமணர்களை நோக்கித் "திருத்தோணியப்பர் தாம் வீற்றிருக்கும் ஸ்தலங்களெங்குஞ் சென்று தரிசித்துத் திருப்பதிகம் பாடிவருதலின் மேற்கொண்ட என் விருப்பத்தைக் கண்டு, தாம்

அங்கே அமர்ந்த திருக்கோலத்தை இங்கே எனக்குக் காட்டியருளினுர்; நீங்கள் சீர்காழிக்குப் போங்கள்'' என்ருர். அதைக் கேட்ட பிராமணர்கள் சீர்காழிக்குப் போனுர்கள்.

ஆளுடைய பிள்ளையாரும் ஆளுடைய அரசரும் திருவீழிமிழலையிற் பெருமானை வணங்கித் துதித்துக் கொண்டு, அங்குள்ள மடங்களி லிருக்கும்போது, சில காலம் மழையில்லாதொழிய அங்கே பஞ்சம் நேர்ந்தது. அதனுற் சிவனடியார்களும் ஆங்கு வசிக்கும் மக்களும் பசியால் வருந்தினுர்கள். அப்போது திருவீழிமிழலைப் பெருமான் தந் திருக்கோயிலில் உள்ள இரு பீடங்களிலே இரு நாயனுர் பொருட்டும் நாள்தோறும் ஒவ்வொரு பொற்காசு வைத்தருள, நாயன்மா ரிருவரும் அப் பொற் காசை யெடுத்துச் சிவனடியார்களுக்கும் அங்குள்ள ஏனைய மக்களுக்கும் அன்னதானஞ் செய்துவந்தார்கள். இறைவனருளாற் சிலகாலஞ்செல்லப் பஞ்சம் ஒழிந்தது. நாயன்மா ரிருவரும் அத் தலத்தைவிட் டகன்று ஏனைய தலங்களைத் தரிசித்துக்கொண்டு வேதாரணியம் எனப் படும் திருமறைக்காட்டை யடைந்தனர். அங்குள்ள திருக்கோயிலின் கதவு முற்காலத்தில் வேதங்களாற் பூசித்து அடைக்கப்பட் டிருந்தமையால், அதன்பின் அடியார்க ளெல்லாரும் வேருெரு திருவாசலை யிட்டு அதன் வாயிலாக வேதாரணியேசுவரரை வணங்கி வந்தனர். அந் நிலையைக் கண்ட நாயன்மா ரிருவரும் வேதாரணியேசுவரரை நேராகத் தரிசிக்க விரும்பி ணுர்கள். அப்பர் சுவாமிகள் "பண்ணி னேர்மொழியா ளுமை பங்கரோ'' என்னும் தேவாரத் திருப்பதிகத்தைப் பாட, திருக்கதவுகள் தாமே திறந்தன. நாயன்மா ரிரு வரும் சுவாமியை நேர்வாயிலாகத் தரிசனஞ் செய்தனர்.

பின்னர்ச் சம்பந்தசுவாமிகள் "சதுரம் மறைதான்" என்னும் பதிகத்தைப் பாடித் திருக்கதவுகள் மூடச் செய்தார். அந்நாள் தொடக்கம் அத் திருக்கதவுகள் மற்றைக் கதவுகளைப்போலத் திறத்தலும் மூடுதலும் அமைந்திருந்தன. சமயகுரவ ரிருவரும் சிலகாலந் திருமறைக்காட்டிலுள்ள திருமடங்களில் அடியார்களுடன் எழுந்தருளி யிருந்தனர்.

இங்ஙனமாக, பாண்டி நாட்டிலே சைவ சமயம் குன்ற, சமணசமயம் பரவத் தலைப்பட்டது. அந்நாட்டை யாளும் கூன் பாண்டியனென்னும் அரசனும் சமணகுருமார் போதனையில் அகப்பட்டுச் சமணனானான். அதனைக் கண்ட பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும் முதன் மந்திரியாராகிய குலச்சிறையாரும் பெரிதுங் கவலைகொண்டனர். திருஞானசம்பந்தப் பிள்ளையார் செய்யும் அற்புதங்களைக் கேள்வியுற்ற அந்த இருவரும், பிள்ளையார் அப்பொழுது திருமறைக் காட்டில் எழுந்தருளி யிருக்கின்றார் என்பதை யறிந்து, அப்பிள்ளையாரைத் தங்கள் நாட்டிற்கு அழைத்துச் சமண சமயத்தை யொழித்துப் பிள்ளையார்மூலம் சைவ சமயத்தைத் தாபிக்க நோக்கங்கொண்டு, மதுரையிலிருந்து சில அன்பர்களை வேதாரணியத்தில் எழுந்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரிடம் விடுத்தார்கள்.

அங்ஙனம் சென்ற அன்பர்கள் வேதாரணியத்தை யடைந்து திருஞானசம்பந்தப் பிள்ளையாரைத் தரிசித்து வணங்கி, தாங்கள் அங்கே வந்த நோக்கத்தை விண்ணப்பஞ் செய்தனர். அதனைக் கேட்ட ஆளுடைய பிள்ளையார் திருவுளஞ் சம்மதித்து, பாண்டிநாட்டிற்குப் புறப்படுதலும், அதனை யுணர்ந்த அப்பர்சுவாமிகள்

"பிள்ளையாரே! நீரோ சிறு பாலராவீர்; அங்குள்ள சமணர்களோ கொடியவர்கள்; வயசேறிய எனக்கு அச் சமணர்கள் அன்று விளைத்த துன்பங்களை நான் அனுபவ வாயிலாக அறிந்துள்ளேன்; ஆதலால் பாண்டி நாட்டுக்குப் புறப்படுதல் புத்தியன்று" என அருள்மீ தூரக் கூறினர். அதனைக் கேட்ட பிள்ளையார் "வேயுறு தோளி பங்கன்" என்னும் திருப்பதிகத்தைப் பாடி அப்ப ரிடம் அநுமதி பெற்று வேதவனநாதரை வணங்கி விடைகொண்டு செல்வாராயினர். செல்லும் மார்க்கத்தி லுள்ள தலங்கள்தோறுஞ் சென்று சென்று, ஆங் காங்குக் கோயில்கொண்டருளிய பெருமானை வணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு, ஆளுடைய பிள்ளையார் தம் பரிசனரும் அடியவர்களும் தம்மைச் சூழ்ந்து செல்லப் பாண்டிநாட்டைச் சமீபித்தார்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பாண்டிநாட்டின் தலைநகராகிய மதுராபுரியின் எல்லையை அடைந்தன ரென்பதையறிந்த மங்கையர்க்கரசியார் மனத்தி லடங்கா மகிழ்ச்சி யடைந்து, தங்கள் முதன்மந்திரியாராகிய குலச் சிறையாருக்கு, சுவாமிகளை எதிர்கொண்டு உபசரித்து அழைத்துவரும்படி தெரிவிக்க, மந்திரியாரும் மனம் மகிழ்ந்து சுவாமிகளை எதிர்கொண் டழைக்கும்வண்ணம் சென்று வணங்கினுர். பிள்ளையார், குலச்சிறையாரை அருளுடன் நோக்கி இன்மொழி கூறித் திருவாலவாய்த் திருக்கோயில் எத்திசையில் இருக்கின்றதென வினவ, உந்நத சோலைகள் கோபுரங்களோடு புலப்படுந் திசை யைச் சுட்டிக் காட்டி, "அத்திசையிற் காணப்படுவதே ஆலவாய் அமலன் திருக்கோயில், சுவாமீ" எனக் கூறி வணங்குதலும், பிள்ளையார் "மங்கையர்க் கரசி" என்று தொடங்குந் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு, கை

களூந் தலைமே லேறக் கும்பிட்டபடி கடந்து திருக் கோயிலை யடைந்தார்.

ஆலவாய்த் திருக்கோயிலிலுள்ள தூல லிங்கமாகிய திருக்கோபுரத்தை வணங்கிக்கொண்டு கோயிலினுள்ளே சென்று மும்முறை வலம்வந்து சன்னிதியை யடைந்து அன்பு பெருக, என்பு உருக, உள்ளங் குளிரச் சொக்க லிங்கப் பெருமானுரை அடியற்ற மரம்போல வீழ்ந்து வணங்கி, எழுந்துநின்று துதித்தார். திருக்கோயிலில் மங்கையர்க்கரசியாரையுங் கண்டு மகிழ்ந்து, கோயிலின் புறத்தே வந்து ஒரு திருமடத்திலே சிவனடியாரோடும் பரிசனரோடும் எழுந்தருளி யிருந்தார். அங்ஙனமாக, பொழுது பட்டது.

இராக்காலமாதலும், திருமடத்திலே யுள்ள அடி யார்களும் பரிசனரும் தமிழ்மறையாகிய தேவாரப் பதி கங்களை ஓத, அதனுல் எழுந்த ஒலி சமண குருமார் காதிற் பட்டது. அவர்கள் மனம் பொருராய்த் தங்கள் அரசனுகிய கூன்பாண்டியனது மாளிகையை யடைந்து, சோழநாட்டிலிருந்து சைவச் சிறுவர் ஒருவர் வந்து மதுரைக் கோயிலுக் கணித்தான திருமடத்திலே பல் லாயிரக் கணக்கான பரிசனரோடு இருப்பதையும், அப் பரிசனர்கள் சிவனுக்குரிய பாட்டுக்களைப் பாடுவதையும், வந்த அந்தச் சைவச் சிறுவர் சமண மதத்தைக் கெடுத் துச் சைவத்தை நிலைநாட்டிச் செல்ல நோக்கங்கொண் டுள்ளா ரென்பதையும் அரசனிடம் முறையிட்டு வருந்தி ஞர்கள். "அதற்கு நான் செய்யவேண்டுவது என்ன" என்று அரசன் சமணகுருமாரைக் கேட்க, அவர்கள், "மகாராசாவே, நீர் ஒன்றுஞ் செய்யவேண்டாம்; 'அச் சைவர்கள் வந்திருக்குந் திருமடத்திற்கு எங்கள் மந்திர

வலியால் நெருப்புப் பற்றவைத்து அச் சைவரை எரித்துச் சாம்பராக்க அநுமதி தந்தால் அமையும்" என்றூர்கள். அரசல அதற்கிசைந்தான்.

சமணர்கள் நள்ளிரவிற் கரந்து திருமடத்தைச் சமீபித்து மந்திரவலியால் தீமூட்டித் திருமடத்திற் பற்ற வைக்க முயன்றபோது, நெருப்புப் பற்றவில்லை; அதனைக் கண்ட சமணர்கள் நெருப்புத் தழலையே அதிகமாக அள்ளித் திருமடத்தின் கூரையுள் ஒருபக்கத்திற் சொருக, அத்தீ மூண்டு எரிய, அதனையுணர்ந்த அங் குள்ள அடியவர்கள் உடனே திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு முறையிட, பிள்ளையார் உண்மையை யுணர்ந்து "குடிகள் செய்யுந் தீமை அரசனைச் சேரும்; அன்றியும் இந்த அரசனும் அவர்கள் செய்யுந் தீமைக்கு உடன்பாடாயினுன். ஆனதால் இந்நெருப்பு இம் மடத்தைவிட் டகன்று பையவே சென்று பாண்டிய னைச் சுடுவதாக" என்று திருவுளத்திற் கொண்டு "செய்யனே திருவாலவாய்" என்னுந் தேவாரத்தைப் பாடத் தொடங்கி, ,'பையவே சென்று பாண்டியற் காகவே" என முடித்தருளினுர். திருமடத்தி லிட்ட தீ உடனே அம்மடத்தைவிட் டகன்று பாண்டியனை யடைந்து வெப்புநோயாகி அவனுக்கு வேதனையுறுத்தத் தலைப் பட்டது.

அந்த வெப்புநோயைச் சகிக்கலாற்றுத பாண்டியன் வைத்தியர் பலரையும் சமண குருமார்களையும் வருவித் தான். வந்தவர்கள் "மணி, மந்திர, ஔஷதம்" என் னும் மூவகையான சிகிச்சையைச் செய்தும் அந்நோயை மாற்ற இயலாராயினுர்கள். சமணர்கள் செய்யுஞ் சிகிச்சையால் அந்நோய் படிதலின்றி மேன்மேலும் அதிகப்படுவதை யுணர்ந்த பாண்டியன் மிக வருந்திச்

சமணர்களைச் சினந்து, "நீவிர் எல்லீரும் இவ்விடம் விட்டுப் போய்விடுங்கள்" என்று சொல்லி அறிவு சோர்ந்தான். அரசன் வெப்புநோயால் வருந்துவதைக் கண்ட பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாருங் கலக்க மடைந்து அரசனை வணங்கி "திருஞானசம்பந்தமூர்த்தி நாயனருக்குச் சமணர்கள் செய்த தீங்கினுலேயே உம்மை இந்த வெப்புநோய் அடுத்தது; ஆதலால் இந்தப் பாதகர்கள் செய்யும் மருந்து இந்நோயை வளர்க்குமே யன்றித் தீர்க்கமாட்டாது; அந்தத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனுர் திருவுளமிரங்கித் திருவருள்நோக்கஞ் செய்வாராயின், இந்த வெப்புநோய் மாத்திரமா! எவர்க ளாலும் நீக்குதற்கரிய பிறவிநோயும் நீங்கிவிடும்; இது சத்தியம்" என்றுர்கள்.

அதனைக் கேட்ட அரசன் "என்னைப் பீடித்து வருத்தும் நோயை நீக்கி வெல்பவர் பக்கம் நான் சார் வேன்" என்று கூறினன். உடனே குலச்சிறையார் பிள்ளையார் இருக்குந் திருமடத்திற்குச் சென்று விஷ யத்தை விண்ணப்பஞ் செய்ய, பிள்ளையார் அதற் கிசைந்து திருவாலவாய்த் திருக்கோயிலுக்குச் சென்று சுவாமி தரிசனஞ் செய்து "காட்டுமாவ துரித்து" "வேத வேள்வியை நிந்தனை" என்ற திருவாக்குக்களைக் கொண்ட தேவாரத் திருப்பதிகங்களைப் பாடிக்கொண்டு அரச னுடைய மாளிகைக்கு எழுந்தருளுதலும், மங்கையர்க் கரசியார் குலச்சிறையாரோடு பிள்ளையாரை வர வேற்றுப் பணிந்து அரசன் கிடக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றனர். அரசனும் படுக்கையிற் கிடந்தபடி பிள்ளையாரைக் கைகூப்பி வணங்கித் தன் தலைமாட்டில் ஒரு பொற் பலகை இடுவித்து அவரை அதன்கண் இருக்கச்செய்தான். பிள்ளையாருடைய

சைவத் திருவேடப் பொலிவைக் கண்டமாத்திரத்தே அவனைப் பீடித்த நோய் குறையத் தொடங்கியது. கும்பிட்ட அரசன் பிள்ளையாரை நோக்கி "சுவாமி யுடைய ஊர் எது" என்று பணிவுடன் வினவ, பிள்ளையார் "பிரமனூர் வேணுபுரம்" என்றற் றொடக் கத்த தேவாரத் திருப்பதிகத்தைப் பாடியருளி, தாம் திருவவதாரஞ் செய்த ஊர் சீகாழியென்பதையும், அத் திருப்பதிக்குரிய பல நாமங்களையும், அதன் தொன்மை யையும் அங்குக் கோயில்கொண்டருளிய பெருமானு ருடைய மகத்துவத்தையும் எடுத்து விளக்கியருளினார். சமணர்கள் பெருங் கலக்கங் கொண்டவர்களாய்ப் பிள்ளையாரைச் சமயவாதில் வெல்லலாமென நினைத் தார்கள்.

அங்ஙனம் நினைத்துத் துள்ளி யெழுந்து சமணர்கள் சூழ, அதனைக் கண்ட மங்கையர்க்கரசியார் "எங்கள் பிள்ளையாருக்கு இச்சமணர்கள் யாதும் இடையூறு செய்வரோ" என் றெண்ணிச் சஞ்சலமுற, தேவியார் கொண்ட சஞ்சலத்தை யுணர்ந்த பிள்ளையார், "மானி னேர்விழி மாதராய்" என்னுந் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடி மங்கையர்க்கரசியாரைத் தேற்றினார்; அப்பொழுது பாண்டியன் சமணர்களைப் பார்த்து "சமயவாதம் வேண் டாம், நீங்கள் கொண்ட தெய்வத்தின் அருளால், இப் பொழுது என்னைப் பீடித்து வருத்தும் நோயை மாற்று திர்" என்றான். சமணர்கள் அதற் குடன்பட்டு, அரச னுடைய இடப்பக்கத்தி லுற்ற வெப்புநோயை மந்திரம் சொல்லி நீர் தெளித்து மயிற்பீலிகொண்டு தடவுதலும், அவ்விடப்பாகத்துள்ள நோய் அவற்றாற் குறைதலின்றி அதிகப்பட்டது. உடனே அரசன் பிள்ளையாரைப் பரிவுடன் பார்க்க, பிள்ளையார் ஆலவாய்ப் பெருமானைச்

சிந்தித்துக்கொண்டு "மந்திரமாவது நீறு" என்னும் திருப் பதிகத்தைப் பாடியவண்ணம் தமது அருமைத் திருக் கரத்தில் விபூதிகொண்டு அரசனுடைய வலப் பாகத் தைத் தடவுதலும், அப்பாகத்திலுள்ள வெப்புநோய் அறவே நீங்கி இடப்பாகத்திற் சென்று சேர, அரசன் அதனுற் பெரிதும்வருந்தியவனுய்ச், சமணர்களைச் சினந்து நோக்கி, "நீவிர் தோற்றீர்; ஆதலால் இவ்விடம்விட் டகலுமின்" எனக் கூறி, இடப்பாகத்துள்ள நோயையும் அறவே மாற்றியருளும்வண்ணம் பிள்ளையாரை வேண்டி ஞன். சுவாமிகள் தம் திருக்கரத்தால் அவ்விடப்பாகத் திலும் விபூதியைத் தடவி அரசனைப் பீடித்து வருத்தும் நோயை அறவே நீக்கியருளினுர்; உடனே அரசன் படுக்கைவிட் டெழுந்து திருஞானசம்பந்தப்பிள்ளையாரை வணங்க, அவரும் அவனுக்கு அருள்புரிந்தார்.

தோல்வியுற்ற சமணர்கள் எவ்வகையிலேனும் பிள்ளையாரைத் தாங்கள் வெல்லவேண்டுமென்ற எண் ணங்கொண்டு பகைத்தார்கள். அதனை யுணர்ந்த பிள்ளையார் "உங்கள் சமயக் கொள்கையை எடுத்து எம்முன் பேசுங்கள்" என்று வாதுக் கழைக்க, சமணர் கள் அதற் குடன்படாமல் "கண்ணுக்குப் புலனுகும் அற்புதங்களைச் செய்து உம்மை வெல்லுவோம்" என்று கூறித் தம் சமய உண்மையை ஏட்டி லெழுதி, "எங்கள் சமய உண்மை எழுதப்பட்ட இந்த ஏடு நெருப்பி விடும் போது வேவதின்றிப் பச்சென்றிருந்தால் வெற்றி எங்கள் பக்கலாகும்" என்று கூறினுர்கள். உடனே திருஞானசம்பந்தப் பிள்ளையார் தாம் பாடியருளிய தேவாரப்பதிகங்களைக் கொண்ட திருவேட்டிலே கயிறு சார்த்தி "போகமார்த்த பூண்முலையாள்" என்னும் திரு ள்ளாற்றுப் பதிகங் கிடைக்க, அதனைக் கையில்

எடுத்துக்கொண்டு நள்ளாற்றுப் பெருமானைச் சிந்தித்து வணங்கி, "தளிர் இளவள ரொளி......நள்ளாறர் நாமமே, மிளிர் இளவளர் எரியிடி லிவை பழுதிலை மெய்ம்மையே" என்ற பதிகத்தைப் பாடி அனைவருங் காணத் தீயி லிட்டனர். அவ்வேடு வெந்து எரியாது பச்சையாய் விளங்கிற்று.

சமணர்கள் தங்கள் சமயப்பொருள் எழுதப்பட்ட ஏட்டைச் சந்தேகத்தோடு தீயிலிட்டனர். இட்டமாத் திரத்தே அதுவெந்து சாம்பலாயிற்று. அதனைக்கண்டு கலக்கங் கொண்ட சமணர்கள் தத்தம் சமய உண் மைகள் எழுதப்பட்ட ஏடுகளை, வேகமாய்ப் பாயும் ஆற்றிலிட்டால், எவரிட்ட ஏடு ஆற்றில் அள்ளுண்டு செல்லாமல் எதிரேறிச் செல்லுமோ, அந்த ஏட்டுக் குரியவரே வெற்றி பெற்றவராவர் என்றார்கள். இதனைக் கேட்ட குலச்சிறை நாயனார் "இம்முறையும் தோல்வி யடைபவருக்கு என்ன தண்டனை" என்று கேட்க, அவர்கள் பெருங் கோபம் மூளப் பெற்றவர்களாய் "இந்த வாதத்தில் இழந்தோமாகில், இவ்வேந்தனே எங்களைக் கழுவிலேற்றுக" என்றார்கள். கேட்ட அரசன் "நேர்வதை யறியாது சீற்றத்தாற் சபதமிடுகின்றீர்கள் ; விரும்பிய வண்ணம் செய்யுங்கள்" என, சமணர்கள் "அத்தி நாத்தி" என்று ஏட்டிலெழுதி அதனை வைகை யாற்றிலிட, ஆற்று நீரோடு அள்ளுண்டு அந்த ஓலை கடலை யடைந்தது. அதுகண்ட சமணர்கள் சிந்தை கலங்கித் திருஞான சம்பந்தப் பிள்ளையாரை நோக்கி "உம்முடைய ஏட்டையும் இவ்வாற்றில் இட்டாற் றானே உண்மை வெளிப்படும்" என்றனர்.

உடனே சுவாமிகள் "வாழ்க அந்தணர்" என்னுந் திருப்பதிகத்தை ஒரு ஏட்டில் வரைந்து ஆலவாய்ப்

பெருமானைத் தியானித்தவண்ணம் ஆற்றி விடுதலும், அவ்வேடு நீரைக் கிழித்துக்கொண்டு எதிரேறிச்செல்ல, அதுகண்ட குலச்சிறையார் அதன் செலவை நோக்கியபடி ஓர் குதிரைமீது ஏறிக்கொண்டு விரைந்து சென்றார். ஏடு எதிரேறிச் செல்வதை அவதானித்த ஆளுடைய பிள்ளையார் அதன் செலவைத் தடுக்க நினைந்து "வன்னியுமத்தமும்" என்றற் ருெடக்கத்த தேவாரத் திருப்பதிகத்தைப் பாடியருள, ஏடு அப்பாற் செல்லாது நட்டாற்றிலே தங்கியது. அதுகண்ட குலச்சிறையார் குதிரைவிட்டிறங்கி, ஆற்றிடைச்சென்று அத் திருவேட்டினை இரு கரங்களாலும் எடுத்துக்கொண்டு மீண்டு குதிரையிலேறிவந்து, எல்லாருங்காண அரசனுக்குக் காட்டினார். அரசன் அற்புதமடைந்து குலச்சிறையாரை நோக்கிச் "சமணர்கள் முன்பு தாமே ஒப்புக்கொண்டபடி அவர்களைக் கழுவேற்றுக" எனக் கட்டளையிட்டான். இதனைக்கேட்ட ஆளுடைய பிள்ளையாரும் "இகலில ரெனினும் சைவரிருந்து வாழ் மடத்திற்றீங்கு, தகவிலாச் சமணர்செய்த தன்மையாற் சாலுமென்றே, மிகையிலா வேந்தன்செய்கை விலக்கிடா திருந்தார்".

பிள்ளையா ரிருந்த திருமடத்திற்குத் தீமூட்டிய எண்ணுயிரம் சமணகுருமாரும் அபிமானத்தோடு கூடியவர்களாய்த் தாமே கழுவேறி மாண்டார்கள். பாண்டியராசன் அற்புதமும் அச்சமும் அடைந்தவனாய் ஆளுடைய பிள்ளையாரை மீளவும் வணங்கி, அவரருளிய விபூதியை ஏற்று 'சிவ சிவ" என்று தன் நெற்றியிலும், பூசவேண்டிய ஏனைய அங்கங்களிலும் பூசினான். பிள்ளையார் தாம் பாடியருளிய "வாழ்க அந்தணர்" என்னுந் திருப்பதிகத்தில் "வேந்தனு மோங்குக" என்று பாடிய திருவாக்கின் விசேஷத்தினால், பாண்டியன் தன்னுடம்பி

லுள்ள கூன் நீங்கப்பெற்று நிமிர்ந்து "நின்றசீர் நெடு மாறன்" என்னும் நாமத்தோடு விளங்கினன். பாண்டி நாட்டின் கண்ணே பழையபடி சைவசமயம் பரவச் சமண சமயம் ஒழிந்தது.

அதன் பின்னர் ஆளுடைய பிள்ளையார் அந் நாட்டின்கண்ணேயுள்ள தலங்களை யெல்லாம் தரிசித்துத் தேவாரப் பதிகங்கள் பாடி, பின் அந்நாட்டை விட்டகன்று சோழநாட்டிற்குச் சென்று காவிரி நதிதீரத்திலுள்ள தலங்களைத் தரிசித்துத் தேவாரத் திருப்பதிகம் பாடி, அந் நதியின் அக் கரையிலுள்ளதாகிய திருக் கொள்ளம்புத்தூர் என்னுந் தலத்துக்குச் செல்ல விரும்பியபோது, நதிபெருகி ஓடியதால், அங்குள்ள வள்ளக்காரர் வள்ளமோட்ட இயலாதொழிய, சுவாமிகள் கரையிலுள்ள ஓர் வள்ளத்தை அவிழ்ப்பித்து அதன் கண் சிவனடியாரோடும் பரிசனரோடும் ஏறிக்கொண்டு "கோட்டமே கமழும்" என்பது முதலாகவுடைய தேவாரப் பதிகத்தைப் பாட, ஓடம் தானகவே அவர்களை அக்கரையிற் கொண்டுபோய்ச் சேர்த்தது. அக்கரை யடைந்த பிள்ளையார் கொள்ளம்புத்தூர்ப் பெருமானை வணங்கிக்கொண்டு வேறுபல தலங்களையுந் தரிசித்துத் தேவாரத் திருப்பதிகங்கள் பாடினர்.

பின்னர், அப்பர்சுவாமிகள், திருப்பூந்துருத்தி யென்னுந் தலத்திலே சுவாமி தரிசனஞ் செய்துகொண்டிருக்கின்ரு ரென்பதைக் கேள்வியுற்றுப் பிள்ளையார் அத்தலத்தை நோக்கிச் செல்வாராயினர். ஆளுடைய பிள்ளையார் அங்கு வருகின்ரு ரென்பதைக் கேள்வியுற்ற அப்பர்சுவாமிகள் உடனே புறப்பட்டு எதிர்கொள்ளச் சென்று, ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளிவரும்

சிவிகையைத் தாமும் பரிக்க வேண்டுமென்ற ஆசை கொண்டவராய், எவரும் அறியாவண்ணம் அடியார் பரிசனர்கள் கூட்டத்துட் கலந்து ஆனந்தமாகப் பிள்ளையார் எழுந்தருளிவரும் சிவிகையைத் தாங்குதலும், அப்பொழுது, ஆளுடையபிள்ளையாரின் திருவுளமானது காரணமறியாது சஞ்சலமுற "எங்கள் அப்பர் எங்குற்றுர்" என்று வினவினுர்; "தங்கள் சிவிகையைத் தாங்கும் பேறுபெற்றேனுய் இங்குற்றேன்" என்றுர் அப்பர். கேட்ட மாத்திரத்தே ஆளுடையபிள்ளையார் சிவிகையினின்றும் குதித்து "அப்பரே, இப்படிச் செய்தல் ஞாயமோ" என்று பரிவுடன் சொல்லி அவரை வணங்க, அவரும் இவரை வணங்கினுர். அவர்கள் பத்தித் திறத்தைக் கண்ட அடியவர்கள் எல்லோரும் அற்புதமடைந்து அச்சமயகுரவர் இருவரையும் பணிந்தனர்.

பின்னர் இருவரும் திருப்பூந்துருத்திப் பெருமானுரை வணங்கித் தேவாரம்பாடி அத்தலத்தின் அயலேயுள்ளதாகிய திருமடத்தில் எழுந்தருளி யிருக்குங்கால், ஆளுடையபிள்ளையார் தாம் பாண்டிநாட்டிற்குச் சென்றபோது, அந் நாட்டில் இறைவன் திருவருளால் நடந்த வைபவங்களை அப்பர் சுவாமிகளுக்குச் சொல்ல, கேட்ட அப்பர்சுவாமிகள் இறைவன் திருவருளின் பெருமையையும், திருஞானசம்பந்தப்பிள்ளையாரின் பத்தித் திறத்தையும் பாராட்டி மகிழ்ந்தனர். அப்பர்சுவாமிகள் தாம் தொண்டை நாட்டிலுள்ள தலங்களைத் தரிசித்த வரலாற்றை ஆளுடைய பிள்ளையாருக்குச் சொல்ல, அவர் பின்னரும் சில தலங்களைத் தரிசித்துக்கொண்டு தொண்டை மண்டலத்துக்குச் செல்வாராயினர்.

திருவோத்தூர் என்னும் தலத்திற் சிவனடியவரொருவருக்குரிய பனைக ளெல்லாம் ஆண் பனைகளாய்

வளர்ந்து பயன்தராது நிற்பதை யவதானித்த சமணர்கள், அந்த அடியாரைப் பரிகசித்தனர்; அவ் வடியவர் ஆளுடையபிள்ளையார் வரவை யறிந்து அவரிடஞ் சென்று வணங்கி, சமணர்கள் தம்மை அவமதித்ததையும், அதற்காகிய காரணத்தையும் விண்ணப்பஞ் செய்ய, ஆளுடைய பிள்ளையார் "பூத்தேர்ந்தாயன" என்றற் றொடக்கத்த தேவாரத் திருப்பதிகத்தைப் பாடி, அந்த ஆண்பனைக ளனைத்தையும் பெண்பனைகளாக்கிப் பயன் உதவச்செய்தார். அதுகண்ட சமணர் தாம் முன்னர்ச் செய்துகொண்ட சபதத்தின்படி அத் திருப்பதியை விட்டகன்றனர். பின்னர்த் திருஞானசப்பந்தப் பிள்ளையார் பல தலங்களைத் தரிசித்து, தேவாரப் பதிகங்களைப் பாடித் திருக்காளத்தியை யடைந்து, காளத்தியப்பரையும் அக் காளத்தியப்பருக்குத் தம் கண்ணை யிடந்து அப்பிய கண்ணப்ப நாயனாரையும் தரிசித்துத் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடி அத் தலத்திற்றானே இருந்துகொண்டு திருக்கயிலை, திருக்கேதாரம், திருக்கோகர்ணம், இந்திரநீலபருப்பதம், ஸ்ரீசைலம் முதலிய வடநாட்டிலுள்ள தலங்களுள் எழுந்தருளிய பெருமானாரைச் சிந்தித்துத் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடினார். அதன் பின்பு திருவேற்காடு, திருவலிதாயம் என்னுந் தலங்கட்குச் சென்று சுவாமி தரிசனஞ்செய்து தேவாரத் திருப்பதிகங்களைப் பாடித் திருவொற்றியூரை யடைந்து ஒற்றியூர்ப் பெருமானாரை வணங்கித் திருப்பதிகம் பாடிச் சிலநாள் அத் தலத்தில் எழுந்தருளி யிருந்தார்.

இங்ஙனமாக, திருமயிலாப்பூரிலே வைசியர் குலத்திலே சிவநேசர் என்னும் பெயரையுடைய அன்பரொருவர் இருந்தார். அவருடைய அழகிற் சிறந்த

ஏக புத்திரியின் பெயர் பூம்பாவை. சிவநேசச் செட்டியார் மதுரையிலே திருஞான,சம்பந்தப் பிள்ளையார் சமணரைச் சமய வாதத்தில் வென்றமையையும், அவர் செய்துள்ள அற்புதங்களையும் கேள்வியுற்று, கல்வி, அறிவு, ஒழுக்கம், பேரழகு என்னும் இவற்ரேடு கூடிய தமது ஓரேயொரு மகளையும், தமக்குரிய செல்வம் முழுவதையும் ஆளுடைய பிள்ளையாருக்கே அளிப்பதென நிச்சயித்தார். உத்தம கன்னிகையான பூம்பாவை ஒரு நாட் பூக்கொய்யும்போது அவளை நாகந்தீண்ட உயிர் மாண்டாள். அதனைக் கண்டு தீராக்கலக்க மடைந்த தந்தையார் தம் மகளின் ஈமக்கடன்களை முடித்து என்பையும் சாம்பலையும் மாத்திரம் ஒரு புதிய குடத்திலிட்டுக் கன்னி மாடத்தில் வைத்து அக் குடத்திற்கு இரத்தினுபரணங்களும் பூமாலையும் சாத்தி நாள்தோறும் பூசித்துத் திருஞான சம்பந்தப் பிள்ளையாருடைய வரவை எதிர்பார்த்தவண்ண மிருந்தார்.

பிள்ளையார் திருவொற்றியூர்த் தலத்தை யடைந்தாரென்பதைக் கேள்வியுற்ற மாத்திரத்தே, சிவநேசரென்பவர் பெருமகிழ்ச்சி யுற்றுத் திருவொற்றியூர் தொடக்கம் திருமயிலாப்பூர் வரையும் நடைப் பந்தர் இடுவித்துத் திருமயிலாப்பூரில் விசேஷமான அலங்காரங்களை யெல்லாஞ் செய்து, திருவொற்றியூர்க்குச் சென்று ஒற்றியூர்ப் பெருமானுரையும் பிள்ளையாரையும் வணங்கிப் பிள்ளையாரைச் சிவனடியாரோடும் பரிசனத்தினரோடும் திருமயிலாப்பூருக்கு அழைத்து வந்தார். பிள்ளையார் திருமயிலாப்பூர்த் தலத்தில் எழுந்தருளிய காபாலீச்சுரரை வணங்கித் துதித்துத் திருக்கோயிலின் புறத்தே வரும்போது, அங்கே பூம்பாவையின் என்பும் சாம்பரும் இட்ட குடம் வைத்திருப்பக் கண்டு,

காபாலீசுவரர் சந்நிதியில் நின்று, "மட்டிட்ட புன்னை" என்பது முதலாகவுள்ள தேவாரத் திருப்பதிகத்தைப் பாடத்தொடங்கித் திருக்கடைக் காப்பைப் பாடியருள, பூம்பாவையும் தன் அங்கங்களெல்லாம் முறையே அமைய அழகிய உருப்பெற்று, குடமுடைய எழுந்து வந்து தனது தந்தையாரையும் திருஞான சம்பந்தப் பிள்ளையாரையும் பஞ்சாங்கமாக வீழ்ந்து வணங்கினாள்: பிள்ளையார் அக் கன்னிகைக்கு அருள்நோக்கம் பாலித்தார். அப்பொழுது சிவநேசச் செட்டியார் பிள்ளையாரை வணங்கி 'சுவாமி, அடியேன் பெற்ற இக் குழந்தையையும் அடியேனிடத்துள்ள பொருளையும் தேவரீர் ஏற்றுக்கொள்க" என்று விண்ணப்பஞ் செய்தலும், ஆளுடைய பிள்ளையார் புன்முறுவல் பூத்து அவரை நோக்கி, "அன்பரே, நீர் பெற்ற குழந்தை முன்னரே நாகந்தீண்டி யிறந்துவிட்டாள்; இத் திருமயிலாப்பூர்ப் பெருமானுடைய திருவருளினால் தோன்றிய இவள் நாம்பெற்ற மகளாவள். ஆதலால் உமது உரை தகாதது" என்றார். அதனைக்கேட்ட சிவநேயர் திருவருள்வழி நிற்பாராய்த் தம் புதல்வியைப் பழைய படி கன்னி மாடத்திற்றானே இருத்த, அக்கன்னிகை சிவபெருமானையும், தனக்கு உயிரளித்த திருஞானசம்பந்தப் பிள்ளையாரையும் பூசித்துச் சிலகாலஞ்செல்லச் சிவபத மடைந்தாள்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருமயிலாப்பூர்ப் பெருமானாரைத் தரிசித்துத் தேவாரப்பதிகங்களையும் பாடி, அப்பெருமானாரிடம் அருள் பெற்றுக்கொண்டு திருவான்மியூர் முதலிய பல தலங்களைத் தரிசித்துச் சீகாழிப் பதியை யடைந்தார். அப்போது சிவபாத விருதயரும் அவர் சுற்றத்தினரும் ஆளுடைய பிள்ளை

யாருக்குத் திருக்கல்யாணம் செய்துவைக்க வேண்டு மென்ற நோக்கங் கொண்டாராய், தம் நோக்கத்தைப் பிள்ளையாருக்குத் தெரிவிக்க, பிள்ளையார் அதற் குடன் படாது மறுக்க, தந்தையாரும் சுற்றத்தாரும் "நீர் இப் பூமியின்கண்ணே வேதநெறியை ஸ்தாபிக்கப் புகுந்தீர்; ஆதலால் அவ் வேதவிதிப்படி திருமணஞ் செய்தருளு தற்குத் திருவுளஞ் செய்தல் வேண்டும்" என்றார்கள். பிள்ளையார் வேதநெறி நிலைப்படவேண்டி அதற்கு உடன் பட்டருளினர். இக்காலத்தில் ஆச்சாபுரமென வழங்கப் படும் திருநல்லூர்ப் பெருமணத்தில்வாழ்ந்த நம்பாண் டார்நம்பி என்னும் பிராமணோத்தமருடைய அழகிற் சிறந்த புதல்வியை, பெரியோர் மணம்பேசி நிச்சயித்த பின்னர், திருமணத்திற்காகிய ஆயத்தங்களனைத்தும் அவ் வூரிற்றானே செய்யப்படலாயின. சுபதினத்திலே திரு நீலநக்க நாயனாரே ஆசாரியராகவிருந்து மணவினைக்குரிய வைதிகக் கிரியைகளைச் செய்வாராயினர். வேதவொலி முழங்க, மங்கல வாத்தியங்கள் ஒலிப்பத் திருஞான சம்பந்தப் பிள்ளையார் தம் காதலியின் கையைப் பற்றிய வண்ணம் அக்கினியை வலம் வரும்போது, அக்கினியா யுள்ளவரும் சிவபெருமானே யெனத் திருவுளத்திற் கொண்டு, "இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே, இவள் தன்னோடும் அந்தமில் சிவன்றாள் சேர்வேன்" என்னும் ஆதரவு பொங்க, சுற்றத்தாரும் சிவனடியாரும் புடைசூழ, திருப் பெருமண மென்னும் சிவாலயத்தை யடைந்து பெருமானார் சந்நிதியில் நின்று "எம்பெரு மானே, தேவரீருடைய திருவடிகளை அடையும்பயன் இதுவே" என்று இரந்து "கல்லூர்ப் பெருமணம்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

அப்பொழுது கருணாநிதியாகிய சிவபெருமான் "நீயும் உன் மனைவியும் உன்னுடைய விவாகத்தைக்

காண வந்தவர்கள் எல்லாரும் இந்தச் சோதியினுள்ளே வந்து நம்மை யடையுங்கள்," என்று அருளிச்செய்து, திருக்கோயில் உட்பட மேலோங்கிய சுத்த சோதி வடிவமாக்கி, அச்சோதிக்கு ஒரு திருவாயிலை வகுத்துக் காட்டியருளினார். கிருபாசமுத்திரமாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சோதிவடிவமாய் நின்ற கடவுளை வணங்கித் துதித்து, உலகம் உய்யும் பொருட்டு அதனை அடையும் நெறியை அருளிச்செய்யத் திருவுளங் கொண்டு, யாவருக்கும் ஞானமெய்ந்நெறி நமச்சிவாய என்கின்ற மந்திரம் என்னுங் கருத்தையுடைய "காதலாகிக் கசிந்து" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தை எல்லாருங்கேட்க அருளிச்செய்து "இக் கலியாணங் காணவந்த எல்லீரும் உங்கள் சநநநோய் தீரும்பொருட்டு, இந்தச் சோதியினுள்ளே பிரவேசியுங்கள்," என்று திருவாய்மலர்ந் தருளினார்.

பிறவிக்கடலுட் கரைகாணாது அழுந்தி அறிவின்றி மயங்குகின்றவர்கள், பிள்ளையாருடைய திருமணத்தைச் சேவிக்கப் பெற்றமையால், அந்தச் சோதியினுள்ளே புகுந்தார்கள். திருநீலநக்கநாயனார், முருகநாயனார், சிவபாதவிருதயர், நம்பாண்டார்நம்பி, திருநீலகண்டப்பெரும்பாணர் முதலிய திருத்தொண்டர்கள் தங்கள் மனைவியரோடும், சுற்றத்தாரோடும் புகுந்தார்கள். பிள்ளையாருடைய முத்துச்சிவிகை முதலியவற்றைத் தாங்கிச் சென்றவர்களும் மற்றைப் பரிசனங்களும் தொழுது புகுந்தார்கள். சர்வ ஆன்மாக்களையும் உய்விக்கும் பொருட்டுத் திருவவதாரஞ் செய்தருளிய சைவசித்தாந்த சமயாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தம்முடைய மனைவியாரைக் கைப்பற்றிக் கொண்டு அந்தச் சோதியை வலஞ்செய்து, அதனுள்ளே புகுந்து,

சிவசாயுச்சியம் அடைந்தார். அதன்பின் அந்தச் சோதி மறைந்துவிட, திருப்பெருமணமாகிய திருக்கோயில் தோன்றுதலும், உலகத்திலே பேறில்லாதவர்கள் எல்லாருங் கவலை கொண்டார்கள்; பிள்ளையார் சோதியுட் புகுந்தமையைத் தூரத்தேகண்டு நணுகப் பெறுத அரிபிரமேந்திராதி தேவர்களும் முனிவர்களும் கவலை நீங்கத் தோத்திரம் பண்ணினுர்கள்.

---

உ

## திருநாவுக்கரசுநாயனுர் வரலாறு

"இடையறுப் பேரன்பு மழைவாரு
மிணைவிழியும் உழவாரத்தின்
படையறுத் திருக்கரமுஞ் சிவபெருமான்
றிருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந் தகைதன் ஞானப்பாடற்
றொடையறுச் செவ்வாயுஞ் சிவவேடப்
பொலிவழகுந் துதித்து வாழ்வாம்"

திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூரிலே, வேளாளர் குலத்திலே, குறுக்கையர் குடியிலே, புகழனுர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மனைவியார் பெயர் மாதினியார். அம் மாதினியாரிடத்திலே திலகவதியார் என்கின்ற புத்திரியார் பிறந்தார். அவர் பிறந்து சில வருஷஞ் சென்றபின், சைவசமயம் அபிவிருத்தி யாகும்படி மருணீக்கியார் என்கின்ற புத்திரர் அவதரித்தார். அவருக்குத் தந்தையார் உரிய பருவத்திலே வித்தியாரம்பஞ் செய்வித்தார். மருணீக்கியார், தந்தை

யாருக்குப் பெருமகிழ்ச்சி யுண்டாகும்படி பல கலை களையுங் கிரமமாகக் கற்று வல்லவராயினர்.

திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயசானதும், புகழனார் மரபிற்கு ஒத்த மரபினரும், சிவபத்தியிற் சிறந்தவரும், அரசனிடத்திற் சேனாபதியாக வுள்ளவரு மாகிய கலிப்பகையார் என்பவருக்கும், திலகவதியாருக் கும் விவாகம் நிச்சயிக்கப் பெற்றிருந்தது. விவாகம் நிறைவேறுவதற் கிடையில், அரசன் கட்டளைப்படி, கலிப்பகையார் சேனைத்தலைவராய்ச் சென்று பகைவ ரோடு யுத்தஞ் செய்தவிடத்து மாண்டு வீர சுவர்க்க மடைந்தார். சிலகாலஞ் செல்ல, புகழனாரும் சிவபத மடைந்தார். அவர் மனைவியாராகிய மாதினியார் தம் கணவனோடு உடன்கட்டையேறினார். திலகவதியாரும் மருணீக்கியாரும் கவலைக் கடலுள் மூழ்கியவராய்த் தங்கள் தந்தை தாயருக்குச் செய்யவேண்டிய அந்திய கருமங்களைச் செய்து முடித்தனர்.

இங்கே இப்படி நிகழ, அங்கே கலிப்பகையார் யுத்த களத்திலே தம்முடைய பூதவுடம்பை விட்டுப் புகழுடம் பைப் பெற்றுக்கொண்டதாகிய செய்தி திலகவதியா ருக்குச் செவிப்புலனாக, அவர் "என்னுடைய பிதா மாதாக்கள் என்னை அவருக்கு மணஞ்செய்ய உடன் பட்டிருந்தமையால், இவ்வுயிர் அவருக்கே யுரியது; ஆதலால், இவ்வுயிரை அவருயிரோடு இசைவிப்பேன்" என்று சாவத்துணிந்தார். அதுகண்ட மருணீக்கியார் வந்து அத்திலகவதியாருடைய இரண்டு பாதங்களிலும் விழுந்து அழுது "அடியேன் நம்முடைய பிதாமாதாக் கள் இறந்தபின்னும் உம்மையே அவர்களாகப் பாவித் துப் பூசிக்கலாம் என்றன்றோ உயிர் வைத்துக்கொண்

டிருக்கின்றேன்; அடியேனைத் தனியே கைவிட்டு இறப்பீ ராயின், அடியேன் உமக்கு முன்னமே இறந்து விடுவேன்" என்றார். திலகவதியார் அதைக் கேட்டு, தம்பியார் உயிரோடு இருக்கவேண்டும் என்னும் ஆசை யால் தமது கருத்தை விடுத்து உயிர்தாங்கி, வேறொரு வரையும் விவாகஞ் செய்துகொள்ளாமல், சீவகாருண் ணியம் உள்ளவராகி வீட்டிலே தவஞ் செய்துகொண் டிருந்தார்.

மருணீக்கியார் தாம்கற்ற நூல்கள் வாயிலாக உல கம் நிலையாமையை யுணர்ந்து துறவுபூணக் கருத்துக் கொண்டார். அக்காலத்திற் பரவியிருந்த சமண சம யத்தின் உண்மையை யறியக்கருதி, பாடலிபுரத்திற்குச் சென்று சிலகாலம் சமண நூல்களைப் படித்து, அதன் பயனாக, அவர் சைவசமயத்தைக் கைவிட்டு, சமண சமயத்தைக் கைக்கொள்வாராயினர். சமணர்கள் அவ ருடைய கல்வித் திறமையைப் பாராட்டி, அவருக்குத் தருமசேனர் எனப் பெயரிட்டுத் தங்களுக்குக் குருவா கக் கொண்டனர்.

தம்பியார் சைவசமயத்தை விட்டுச் சமண சமயத் தைச் சார்ந்தனர் என்பதைக் கேள்வியுற்ற திலகவதி யார் மனம்வருந்தி, திருவதிகைத் தலத்தையடைந்து அங்குள்ள வீரட்டானேச்சுவரம் என்னுந் திருக்கோயி லில் எழுந்தருளிய பரம்சிவனுக்குப் பத்தியோடு பணி செய்வாராயினர். அங்ஙனம் பணிசெய்து வரும்போ தெல்லாம், தம்முடைய தம்பியாராகிய மருணீக்கியா ரைச் சமண சமயத்தினின்றும் எடுத்துச் சைவசமயத் திற் சேர்த்தருளவேண்டுமென்று வீரட்டானேசுவரரை இரந்தார்; பெருமான் ஒருநாள் திலகவதியாரின் சொப்

பனத்திலே தோன்றி, "மருணீக்கியைச் சூலேநோயால் வருத்தி ஆட்கொள்வோம்" எனக் கூறியருளினர்.

இறைவனருளின்படி தருமசேனரைக் கொடிய சூலேநோய் தொடர்ந்து வருத்தியது. அந்நோயை நீக்கு வதற்குச் சமணர்கள் தம்மாலான முயற்சிகளனைத்துஞ் செய்தும் பயன்படாமையால் அவரைக் கைவிட்டு நீங்கி ஞர்கள். நோயின் கொடுமையை ஆற்றமுடியாத மரு ணீக்கியார் தம் அரிய தமக்கையாரை அழைத்துவரும் படி தம் சுயம்பாகிகளே இரகசியமாக அனுப்பினர்; சுயம்பாகிகள் திலகவதியாரைக் கண்டு, அவருடைய தம்பியார் தங்களுக்கு இட்ட பணியைச் சொன்ன போது, சமணர் இருக்குமிடத்துக்குத் தாம் வருதல் முடியாதென்றும், வேணுமானல், தாமிருக்கும் இடத் திற்குத் தம்பியார் வரலாகுமென்றும், அச்சுயம்பாகி களிடம் சொல்லியனுப்பினர்.

சுயம்பாகிகள் மீண்டுபோய்த் தருமசேனருக்கு அச் செய்தியைச் சொன்னபோது, அவர் சமணர் எவரு மறியாவண்ணம் இராக்காலத்தில், அச்சுயம்பாகிகள் தம் மைத் தாங்கிவர, மெல்லமெல்ல நடந்து திருவதிகை வீரட்டானத்தையடைந்தார். அங்குள்ள திருமடத்திலே தமது தமக்கையாரைக் கண்டவுடனே அவருடைய பாதங்களே வணங்கி, "நமது குலத்தார் செய்த தவப்பய னெல்லாந் திரண்டு ஒரு வடிவெடுத்தாற் போன்ற அம்மே! அடியேன் கொடிய சூலேநோயைச் சகிக்கலாற் ருமையால் உம்மையே கதியென்று அடைந்தேன்; இனித் தமியேன் உய்ந்து கரையேறும் வழியை அரு ளிச்செய்யும்" என்று விண்ணப்பஞ்செய்து, பாதத்திலே வீழ்ந்தபடி அயர்ந்தார். திலகவதியார் தமக்குச் சொப்ப

னத்திலே பரமசிவன் அருளிச்செய்தபடி முடித்ததை நினைந்து மனங்கசிந்துருகிக் கடவுளை அஞ்சலி செய்து கொண்டு, தம்பியாரை நோக்கி, "அறியாமையினாலே பரசமயப் படுகுழியில் விழுந்து கொடுந் துயரத்தை அனுபவிக்கின்ற தம்பியாரே, எழுந்திரும் என்றார். தம்பியார் சூலைநோயுடனே நடுக்கமுற்று எழுந்து அஞ்சலி செய்தார். திலகவதியார் "இது பரமசிவனுடைய திருவருளே, தம்முடைய திருவடிகளையடைந்த மெய்யன்பர்களுக்கு இன்னருள்புரியும் அக்கடவுளையே வணங்கி அவருக்கே திருத்தொண்டு செய்யும்" என உபதேசித்தார். உடனே மருணீக்கியார் அவ்வுபதேசத்தை யேற்றுக்கொண்டு வணங்கி நிற்க, திலகவதியார் திருவருளை நினைந்து, அவருக்கு ஸ்ரீ பஞ்சாட்சரத்தை ஓதி விபூதியைக் கொடுத்தார். மருணீக்கியார் மிகுந்த ஆசையோடு வணங்கி, அவ்விபூதியை வாங்கிச் சரீரம் முழுதிலும் அணிந்துகொண்டார்.

பின்னர்த் திலகவதியார் தம்பியாரை உடனழைத்துக்கொண்டு போய் வீரட்டானேசுவரர் சந்நிதியில் விடுத்தலும், அவர் அப்பெருமானுரை வணங்கி நின்றார். பெருமான் திருவருளால் மருணீக்கியாரிடத்து மெஞ்ஞானம் உதிக்க, அவர் பெருமானை வணங்கியபடி "கூற்றாயினவாறு விலக்ககலீர்" என்னுந் தேவாரப் பதிகத்தைப் பாடுவாராயினர். உடனே சூலை நோயும் நீங்கியது. "செந்தமிழின் சொல் வளப்பம் மிக்க பதிகம் பாடினமையால், நாவுக்கரசு என்னும் நற்பெயர் நினக்கு எங்கும் வழங்குவதாக" என்றொரு தெய்வவாக்கு எழுந்தது. அன்றுதொடக்கம் திருநாவுக்கரச ரென்னும் திருநாமம் இந்நாயனருக்கு வழங்கிவருதலாயிற்று; மனம் வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களாலும் தாம்

சிவபிரானுக்குத் திருத்தொண்டு புரிதல் வேண்டுமென நியதிகொண்ட திருநாவுக்கரசர் விபூதி ருத்திராக்கம் முதலிய சிவ சின்னங்களைப் பூண்டு, சிவவேடப் பொலிவுடன் உழவாரப் படையுந் தாங்கித் தொண்டு புரிவாராயினர். தம்பியாருடைய நிலைமையைக் கண்டு, திலகவதியார் மகிழ்ச்சியடைந்தவராய்த் திருவதிகை வீரட்டப் பெருமானுருடைய திருவருட்டிறத்தைப் போற்றினர், திருக்கோயிலிலும் திருவீதிகளிலுமுள்ள புல் செடி முதலியவற்றை அகற்றுவதற்காகவே திருநாவுக்கரசு சுவாமிகள் தம்முடைய திருக்கரத்தில் உழவாரப் படையைத் தாங்கி வருவாராயினர்.

திருநாவுக்கரசர் சமண சமயத்தைக் கைவிட்டுப் பழையபடி சைவசமயத்தை மேற்கொண்டு ஒழுகுகின்றாரென்பதைக் கேள்வியுற்ற சமணர்கள் மனக்கொதிப்படைந்தாராய் அச்செய்தியைத் தங்கள் அரசனாகிய மகேந்திரப் பல்லவனிடஞ் சென்று முறையிட்டார்கள். பல்லவ அரசன் சமணர் கூற்றை நிசமென நம்பினான். சைவசமயத்திற் புகுவதற்காகவே தருமசேனர் தமக்குச் சூலைநோய் என்று பொய் சொல்லித் தம் தமக்கையாரிடஞ் சென்றார் எனச் சமய குருமார் தனக்குச் சொல்லியதும் உண்மையென்று நினைத்தான். அதனால் அந்த அரசன் நாயனாரிடத்து அதிக வெறுப்புக் கொண்டவனாய், அவரை அகப்படுத்தித் தண்டனைசெய்ய நிச்சயித்து, நாயனாரைத் தன் முன்னிலைக்கு வரச்செய்தல் வேண்டுமெனத் தன் மந்திரிமாருக்குக் கட்டளையிட்டான். மந்திரிமார் பரிவாரத்தினருடன் திருவதிகையை அடைந்து திருநாவுக்கரசரைக் கண்டு தம்மரசன் கட்டளையை அவருக்குத் தெரிவித்தனர்.

அதுகேட்ட திருநாவுக்கரசு நாயனார் "நாமார்க்குங் குடியல்லோம்" என்னும் மறுமாற்றத் திருத்தாண்ட

கத்தைப் பாடி "நீங்கள் அழைத்தபடியே நாம் வரக் கடவேமல்லேம்" என்றூர். மந்திரிமார் பின்னரும் நாய னரை வரும்வண்ணம் இரந்து கேட்க, அவர் "அடியே னுக்கு வரும் ஆபத்து நீக்கச் சிவபெருமான் இருக் கின்றூர்தாமே" என்று கூறி அவர்களுடன் போதற் கிசைந்தார். அவரை அம் மந்திரிகள் அழைத்துக் கொண்டுபோய்ப் பாடலிபுரத்திலுள்ள பல்லவராசன் சபையில் விடுத்தலும், அவன் நாயனரைக் கண்ட மாத்திரத்தே கோபங் கொண்டானுய், அந்த மந்திரி மாரைப் பார்த்து "இச் சமயத் துரோகிக்குச் செய்ய வேண்டிய தண்டனை யாது" என வினவ, அவர்கள் இவரை நீற்றறையுள் விடல்வேண்டு மென்றூர்கள். உடனே அரசன் நீற்றறையுள் இடும்படி தன் தண்ட லாளர்க்குப் பணிக்க, அக்கொடியவர்கள் நாயனரைப் பற்றிச்சென்று வெவ்விய நீற்றறையுட் புகுத்திக் கதவைப் பூட்டிவிட்டார்கள். நாயனர் அதனுள்ளிருந்து கொண்டு பரமசிவனுடைய திருவடிநீழலைத் தியானித்து "மாசில் வீணையும் மாலைமதியமும்" என்னுந் தேவாரப் பதிகத்தைப் பாடி யருளுவாராயினர். அந் நாயனர் சிவபெருமானுடைய திருவடி நீழலாகப் பாவித்த அந்நீற்றறை, வீணுகானமும் சந்திரனும் தென்றலும், இளவேனிலும், பொய்கையும் போலக் குளிர்ந்தது.

ஏழுநாட் சென்றபின் சமண அரசன் நீற்றறை யின் கதவைத் திறப்பித்துப் பார்த்தபோது, எவ்வகை யான ஊறுபாடுமில்லாமல் அவருடைய மேனி அழ குடன் திகழ்வதைக் கண்டு எல்லோரும் அற்புத மடைந்தனர். ஆனுற் பின்னரும் அரசன் சமணகுரு மாரின் துர்ப்புத்தி கேட்டு நாயனருக்கு நஞ்சூட்டும்படி

கட்டளையிட்டான். ஏவலாளர்கள் நஞ்சூட்டிய பாற் சோற்றை நாயனாரிடங் கொடுக்க, அவர் அவ்வஞ் சனையை யுணர்ந்தும், நஞ்சுண்ட பரமசிவனுக்கு அர்ப் பணஞ் செய்து, அந்நச்சுப் பாற்சோற்றை உட்கொண் டார். அந்நஞ்சும் அமிர்தம்போல் எவ்வகை இடையூற் றையும் விளைக்காதொழிய, அதுகண்ட சமண குருமார் யானையை ஏவி நாயனாரைக் கொல்லுவிக்க வேண்டு மென்று தங்கள் அரசனுக்குச் சொல்ல, மதிகெட்ட அந்த மன்னனும் அதற்கிசைந்து அப்படிச் செய்யும் வண்ணம் தன் தண்டலாளருக்குப் பணித்தான். தண்ட லாளரும் யானைப்பாகரும் மதங்கொண்ட யானை யொன்றை அவிழ்த்துக் கொண்டுவந்து நாயனாருக் கெதிரே அவரைக் கொல்லும்படி தூண்டினர். நாய னார் தம்முடைய முன்னிலையில் வந்த யானையை நோக்கி, "சுண்ணவெண் சந்தனச் சாந்தும்" என்னும் திருப்பதிக மெடுத்து, திருப்பாட்டு இறுதிதோறும், "கேடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நா - மஞ்சுவ தியாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை" என்று பாடி யருளினார். யானையானது அந்நாயனாரை வலஞ்செய்து, எதிராக நிலத்திலே தாழ்ந்து இறைஞ்சி எழுந்து அப்புறம் போக, அதன்மே லிருந்த பாகர்கள் அதனை அங்குசத்தினாலே குத்தித் திருப்பி அவரைக் கொல்ல வேண்டும் என்கின்ற குறிப்பைக் காட்டினார்கள். அது அப்படிச் செய்யாமல், துதிக்கையினால் அவர்களை எடுத்து வீசிக் கொன்றுவிட்டு, வெவ்வே றிடங்களி லுள்ள சமணர்களைத் தேடித் தேடி ஓடி, அவர்களைத் தள்ளி மிதித்துக் கிழித்தெறிந்து கொன்று, அந்நகரத்தி லுள்ளவர்க ளெல்லாரும் கலங்கும்படி அரசனுக்கு ஆகுலத்தை விளைவித்தது.

அந்த யானைக்குத் தப்பியோடிய சமணர்கள் தங்கள் அரசனிடம் புகுந்து "இத் தருமசேனர் எங்கள் சமய

நூலிற் கற்ற மந்திரத்தின் வலியினாலேயே, நாங்கள் அவரைக் கொல்லும்படி விட்ட யானையை அவர் எங்களைக் கொல்லத் தூண்டிவிட்டார்; இனி ஒரு கணப்பொழுதேனும் இத் தருமசேனரை உயிரோடு இருக்க விடின் எங்கள் மார்க்கத்திற்கும் எங்களுக்கும் அழிவு வந்து நேரும்; ஆனதால் இத் தருமசேனரைக் காவலோடு கொண்டுபோய் ஒரு பெரிய கல்லுடன் சேர்த்துக் கட்டித் தோணிமேலேற்றி நடுக்கடலில் இடுதல்வேண்டும்" என்றனர். அரசன் அதற்கு உடன்பட, தண்டலாளர் அப்படியே நாயனாரைக் கயிற்றினாற் கல்லோடு சேர்த்து இறுகக் கட்டித் தோணியி லேற்றிக் கொண்டுபோய் நடுக் கடலிலே தள்ளிவிட்டு, "இனி இவர் ஒருபோதும் மீளப்போவதில்லை" எனச் சொல்லி மீண்டு போயினர். சமுத்திரத்திலே தள்ளிவிடப்பட்ட திருநாவுக்கரசு சுவாமிகள் "அடியேனுக்கு யாது நிகழினும் நிகழுக, அடியேன் எம் பெருமானைத் தோத்திரம் பண்ணுவேன்" என்று நினைந்து, "சொற்றுணை வேதியன்" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் பாட, கல்லானது நாயனார் மேற் பக்கத்தி லிருக்க, சமுத்திரத்திலே தெப்பமாய் மிதந்தது. கட்டிய கயிறோ அறுந்துபோயிற்று; வருணபகவான் கல்லே சிவிகையாக அந்நாயனாரைத் தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூர் என்னுஞ் சிவஸ்தலத்தின் பக்கத்திலே சேர்த்தான். நாயனார், அந்தத் திருப்பதியினின்றும் "அரகர" என்னும் ஓசையுடன் தம்மை எதிர் கொண்ட சிவனடியார்களோடு ஆலயத்திற் சென்று, சுவாமியை வணங்கி, "ஈன்றாளுமாய்" என்னும் திருப் பதிகம் பாடிக்கொண்டு, அங்கே சிலநாள் எழுந்தருளி யிருந்தார்.

கரையேறிவந்த நாயனூர் தமக்குத் தோன்ருத் துணையாய் நின்றருளும் பரமசிவனைத் திருப்பாதிரிப்புலியூர்த் திருக்கோயிலில் தரிசித்து மீண்டும் திருவதிகையை அடைந்தார். திருவதிகையின்கண்ணே யுள்ள அன்பர்கள் நாயனூர் வரவைக் கண்டு பெருமகிழ்ச்சி கொண்டு உபசரித்துத் திருவதிகைவீரட்டானத் திருவீதிவழியே அழைத்துவந்தனர். நாயனூர் திருவதிகைவீரட்டானேசுவரரை வணங்கித் தேவாரம்பாடித் துதித்து, உழவாரத் திருத்தொண்டு முதலியவை செய்துகொண்டு அங்கே வாழ்வாராயினூர். அந் நாளிலே, சமணர்களுடைய துர்ப் போதனைக்கு இசைந்து தீங்கு செய்துகொண்டிருந்த பல்லவராஜன் அத் திருவதிகையிலே வந்து, நாயனூரை வணங்கி, சைவசமயத்திலே பிரவேசித்தான். சமணசமயம் பொய்யென்றும் சைவசமயமே மெய்யென்றும் அறிந்துகொண்ட காடவனென்பவனும் பாடலிபுரத்தி லிருந்த சமணருடைய பள்ளிகளையும் பாழிகளையும் இடித்து அவைகளின் கற்களைத் திருவதிகையிலே கொண்டுவந்து, பரமசிவனுக்குக் குணதரவீச்சரம் என்னுங் கோயிலைக் கட்டினுன்.

அப்பர்சுவாமிகள் சிவதலங்களைத் தரிசிக்கவேண்டுமென்ற விருப்பங்கொண்டு திருவெண்ணெய் நல்லூர் முதலாம் நடுநாட்டிலுள்ள தலங்கள் சிலவற்றைத் தரிசித்துக்கொண்டு பெண்ணுகடத்தை யடைந்து, ஆங்குள்ள தூங்கானைமாடம் என்னும் திருக்கோயிலிற் சென்று தம்முடைய உடம்பின்கண்ணே இடபக்குறியுஞ் சூலக்குறியும் பொறிக்கும்படி "பொன்னூர் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்" என்னுந் தேவாரத் திருப்பதிகத்தைப் பாடி, தூங்கானை மாடத்திற் கோயில் கொண்டருளிய ஈசுவரனை வேண்டினூர்; அப் பெருமானு

ருடைய திருவருளினுற் சிவபூதமொன்று அப்பொழுது தோன்றி அப்பர்சுவாமியினுடைய தோளிலே இடபக் குறியையும் சூலக் குறியையும் பொறித்துவிட்டு மறைந்தது. அதன்பின்னர் திருநாவுக்கரசுசுவாமிகள் சிதம்பர தலத்தை அடைந்து சபாநாயகரையும் சிவகாமியம்மையாரையும் பாடி அத்தலத்திற்றுனே சிலநாட்கள் தங்கியிருந்தார்.

அவ்வாறிருக்கும் நாளில் சீகாழித்தலத்திலே அவதாரஞ் செய்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார், பெரியநாயகியம்மையாருடைய ஞானப்பாலை யுண்டு மூன்றும் வயதிலேயே அற்புதமான தேவாரப் பதிகங்களைப் பாடியருளுகின்றுரென்ற மங்கல செய்தியைக் கேள்வியுற்று, அப்பிள்ளையாரைத் தாம் தரிசிக்கவேண்டுமென்ற ஆவல்கொண்டாராய், அச் சீகாழிப்பதியை நோக்கிச் செல்வாராயினர். திருநாவுக்கரசர் தம்மைத் தரிசிக்க வருகின்றுரென்பதை அறிந்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் தம் பரிசனரோடு புறப்பட்டு அவரை எதிர்கொண்டார். திருநாவுக்கரசு நாயனுர் திருஞானசம்பந்தமூர்த்திநாயனுருடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்க, அவர் தம்முடைய திருக்கரங்களினுல் இவருடைய திருக்கரங்களைப் பிடித்து எழச்செய்து, தாமும் அஞ்சலிசெய்து "அப்பரே" என்றுர். அதற்கு, திருநாவுக்கரசர் "அடியேன்" என்றுர். அவ் விருவரும் தாங்கள் ஒருவரை யொருவர் காணப்பெற்றதினுல் மிக மகிழ்ந்து, ஆலயத்திற் சென்று, சுவாமியை வலங்கொண்டு நமஸ்கரித்து எழுந்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் அப்பமூர்த்தியை நோக்கி, "அப்பரே, உம்முடைய சுவாமியைப் பாடும்" என்று சொல்ல, இவர் திருப்பதிகம் பாடித் திருஞானசம்பந்தமூர்த்தி

நாயனுருடைய திருமடத்திற் சென்று, அவரோடு அளவளாவிப் பலநாள் இருந்தார்.

ஒருநாள் திருநாவுக்கரசுநாயனுர் சோழமண்டலத்திலுள்ள சிவஸ்தலங்க ளெல்லாவற்றையும் வணங்க வேண்டுமென்று தமது திருவுள்ளத்தே தோன்றிய ஆசையைத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுருக்கு விண்ணப்பஞ் செய்து, அவரோடும் திருக்கோலக்காவிற்குச் சென்று, சுவாமிதரிசனம் பண்ணிஞர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் அவ்விடத்தினின்றும் மீண்டருளினுர். அப்பமூர்த்தி திருக்கருப்பறியலூர், திருப்புன்கூர், திருநீடூர், குறுக்கை, நின்றியூர், நனிபள்ளி முதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு காவிரியாற்றின் இரு கரை வழியாகவுஞ் சென்று, செம்பொன்பள்ளி, மயிலாடுதுறை, திருத்துருத்தி, வேள்விக்குடி, எதிர்கொள்பாடி, கோடிகா, திருவாவடுதுறை, திருவிடைமருதூர், நாகேச்சரம், பழையாறை என்கின்ற ஸ்தலங்களைப் பணிந்து பாடி, திருச்சத்திமுற்றத்தை அடைந்தார்.

அங்கே சுவாமிதரிசனஞ் செய்து "கோவாய் முடுகியடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன் - பூவா ரடிச்சுவ டேன்மேற் பொறித்துவை" என்னும் பதிகம் பாடவும், பரமசிவன் "நல்லூருக்கு வா" என்று அருளிச்செய்தார். அப்பமூர்த்தி நல்லூரிலே சென்று சுவாமியை வணங்கியெழுந்தார். எழும்பொழுது, சுவாமி "உன்னுடைய நினைப்பை முடிக்கின்ருேம்" என்று சொல்லித் தம்முடைய திருவடிகளை அவர் சிரசின்மேலே சூட்டியருளினுர். அப்பமூர்த்தி "நினைந்துருகு மடியாரை" என்று திருத்தாண்டக மெடுத்து, திருப்பாட்டிறுதி தோறும்

"திருவடியென் றலைமேல் வைத்தார் நல்லூரெம் பெருமானார் நல்லவாறே" என்று பாடியருளினார்; இன்னுந் தேவாரப் பதிகங்கள் பாடிக்கொண்டு, சிலநாள் அங்கிருந்தார். இருக்குநாட்களிலே, கருகாவூர், திருவாவூர், பாலைத் துறை முதலாகிய ஸ்தலங்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு நல்லூருக்குத் திரும்பி வருவார்.

பின்னர், வைகையாற்றிற்குச் சமீபமாகவுள்ள திங்களூர் என்னுந் தலத்தைத் திருநாவுக்கரசு சுவாமிகள் அடைந்தார். அத்திங்களூரிலே அப்பூதியாரென்னும் சிவபக்தியிற் சிறந்த பிராமணரொருவர் அப்பர் சுவாமிகளின் திருத்தொண்டின் உறைப்பையும் பெருமையையுங் கேள்வியுற்று, அவரைத் தம்முடைய குருவாகப் பாவித்துத் தமது பிள்ளைகள் முதலானோர்க்கும், தாம் செய்துவரும் தண்ணீர்ப்பந்தல் முதலிய தரும ஸ்தாபனங்கட்கும் திருநாவுக்கரசர் என்ற திருநாமத்தையேயிட்டு வருவாராயினர். திருநாவுக்கரசு சுவாமிகள் அவ்வூரிலே செல்லும்பொழுது, இங்ஙனம் தருமஸ்தாபனங்களில் தம்முடைய நாமம் எழுதப்பட்டிருத்தலைக் கண்டு, அப்பூதி நாயனாருடைய வீட்டிற்கு எழுந்தருளினார். அப்பூதிநாயனார் அப்பமூர்த்தியைத் தம்முடைய மனைவியார் புத்திரர் முதலாயினாரோடும் வணங்கி, அங்கே திருவமுது செய்யும்படி பிரார்த்திக்க, அதற்கு அந் நாயனார் உடன்பட்டது கண்டு அமுது சமைப்பித்து, தமது புத்திரராகிய மூத்த திருநாவுக்கரசை நோக்கி, "தோட்டத்திற் சென்று வாழைக் குருத்து அரிந்துகொண்டு வா" என்று சொல்லி யனுப்பினார்; அவர் விரைந்து வாழைக்குருத்து அரியப் புகுந்த பொழுது, ஒரு பாம்பு அவரைத் தீண்டிற்று.

அதை அவர் பொருட் படுத்தாமல், அப்பமூர்த்தி திரு வமுது செய்யும்படி குருத்தை அரிந்துகொண்டு விரை விலே திரும்பிவந்து, விஷந் தலைக்கொள்கையால் மயக்க மடைந்து வாழைக் குருத்தைத் தம்முடைய தாயார் கையிலே கொடுத்துவிட்டுக் கீழே விழுந்து இறந்தார்.

அதுகண்டு அப்பூதி நாயனாரும், அவர் மனைவி யாரும் "ஐயோ! இனி நாயனார் திருவமுது செய்யாரே" என்று துக்கித்து, சவத்தை மறைத்துவைத்து, சிறிதுந் தடுமாற்றமின்றி அப்பமூர்த்தி யிடத்திற் சென்று, "சுவாமீ, எழுந்து வந்து திருவமுது செய்தருளல் வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அப்பமூர்த்தி அங்கு நிகழ்ந்த உண்மையைத் திருவருளினால் அறிந்து கொண்டு, அவர்களுடைய அன்பை நினைந்து திரு வருள் சுரந்து, சவத்தைச் சிவாலயத்தின் முன் கொணர் வித்து, "ஒன்றுகோலா மவர் சிந்தை" என்னுந் திருப்பதி கம் பாடியருளினார். உடனே அப்புத்திரர் உணர்வுபெற்று எழுந்தார். அப்பூதிநாயனார் தம்முடைய புத்திரர் பிழைத்ததைக் கண்டும், அதைக் குறித்துச் சந்தோஷி யாமல், அப்பமூர்த்தி திருவமுது செய்யா திருந்தமை யைக்குறித்துத் துக்கித்து வருந்தினார்; அவ் வருத்தத்தை நீக்கும் பொருட்டு அப்பமூர்த்தி அவருடைய வீட்டிற் சென்று, திருவமுது செய்து, அங்கே எழுந்தருளியிருந் தார். சிலநாட் சென்றபின், திங்களூரினின்றும் நீங்கித் திருப்பழனத்திற்குப் போய், சுவாமி தரிசனஞ் செய்து "சொன்மாலை பயில்கின்ற" என்னுந் திருப்பதிகம் பாடி னார்; அத்திருப்பதிகத்திலே அப்பூதி நாயனாரை "அழ லோம்பு மப்பூதி குஞ்சிப் பூவாய்நின்ற சேவடியாய்" எனச் சிறப்பித்தருளினார். அங்கே எழுந்தருளியிருக்கும்நாளிலே திருச் சோற்றுத்துறை முதலாகிய ஸ்தலங்களுக்கும் போய் வருவார்.

அப்பர் காவிரிக் கரையிலுள்ள சிவதலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாரூரை யடைந்து அங்குப் பலநாள் தங்கி, அதற்கருகிலுள்ள தலங்கட்குச் சென்று பணிந்து வந்தார். பின்பு திருப்புகலூரில் முருகநாயனர் திருமடத்திலே தங்கியிருந்தபோது, ஆளுடையபிள்ளை யார் இவரைத் தேடிவந்தார். அவர் திருவாரூர்த் திருவா திரை விழாவின் சிறப்பை அப்பர் வாக்காலுணர்ந்தார்; உடனே ஆரூருக்குச் சென்றருள, அப்பர் சுவாமிகள் திருப்புகலூரையடைந்து சுவாமிதரிசனஞ் செய்து கொண்டிருந்தார்; ஆளுடையபிள்ளையாரும் மீண்டு அத் தலத்தையடைந்தார்; சிறுத்தொண்டர், திருநீலநக்கர் முதலிய அடியார்களும் அங்கே வந்துசேர, அன்பர் திருக்கூட்டம் பேரின்பத்தில் மூழ்கியிருந்தது. பின்னர் ஆளுடையபிள்ளையாரும் அப்பர் சுவாமிகளும் சிவனடி யார் பலர் சூழ ஒருங்கு சேர்ந்து பல தலங்கட்குச் சென்று ஆங்காங்குக் கோயில் கொண்டருளிய பரமேசு வரனை வணங்கித் தேவாரத் திருப்பதிகங்களையும் பாடி, திருவீழிமிழலை என்னும் தலத்தை யடைந்தனர்.

நாயன்மா ரிருவரும் திருவீழிமிழலை யீசுவரரை வணங்கித் தேவாரத் திருப்பதிகங்களைப் பாடிச் சிவனடி யார்களோடு அத்தலத்தின் கண்ணேயுள்ள திருமடங் களில் இருந்தனர். அவ்வேளையில் அந்நாட்டிற் பஞ்சம் நேர்ந்தமையால், சிவனடியவர்களை உபசரிப்பார் எவரு மில்லையெனக் கண்டு, நாயன்மாரிருவரும் சிந்தை வருந் தினர். அதனைத் திருவுளத்திற் கொண்ட திருவீழி மிழலைப் பெருமான் அவர்களுக்குச் சொப்பனத்திலே தோன்றி, தாம் எழுந்தருளிய திருக்கோயிற் படிகளில் தனித்தனி ஒவ்வொரு பொற்காசு நாடோறும் வைக்கப் படுமெனவும், அக்காசை நாயன்மார் எடுத்தெடுத்து

உணவின்பொருட்டு உபயோகிக்கலாமெனவும் கூறியருளினர். அப்படியே பொற்காசும் வைக்கப்பட்டன. சம்பந்த சுவாமிகள் பொருட்டு வைக்கப்பட்ட காசு வாசி (வட்டம்) இன்றிச் செல்லாதாக, அப்பர் சுவாமிகளுக்கு வைக்கப்பட்ட காசு வாசியின்றிச் செல்வதாக, அதனைக்கண்ட ஆளுடைய பிள்ளையார் பெருமானரைப் பாடித் தமக்குரிய படிக்காசும் வாசியின்றிச் செல்லச் செய்தார்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனரும் திருநாவுக்கரசு நாயனரும் திருவீழிமிழலையினின்றும் நீங்கி, திருவாஞ்சியம் முதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு வேதாரணியத்தை யடைந்து ஆலயத்திலே பிரவேசித்து வலஞ்செய்து, வேதங்கள் அருச்சித்துத் திருக்காப்புச் செய்த அந்நாண்முதல் இந்நாள்வரைக்கும் அடைக்கப்பட்டே யிருக்கின்ற திருக்கதவுக்கு முன்வந்து, வேதங்களாலே திருக்காப்புச் செய்யப்பட்ட அத்திருக்கதவை அடியவர்கள் நீக்கப்பெருமையினலே, வேருேர் பக்கத்திலே ஓர் வாயிலிட்டு அதன்வழியே செல்கின்றூர்கள் என்பதைக் கேட்டறிந்தார்கள். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் அப்பமூர்த்தியை நோக்கி, "அப்பரே, நாம் எப்படியும் சுவாமியை அபிமுகத்திருவாயில் வழியே சென்று தரிசிக்கவேண்டும், ஆதலால் இந்தத் திருக்கதவு திறக்கப்படும்பொருட்டு நீரே திருப்பதிகம் பாடும்" என்ருர். அப்பமூர்த்தி "பண்ணினேர் மொழியாள்" என்னுந் திருப்பதிகத்தைக் கதவு திறக்கப்படும் பொருட்டு பாடியபோது, அது திறக்கப்படாமல் தாழ்த்தது. அதுகண்டு "இரக்கமொன்றிலீர்" என்று திருக்கடைக் காப்பிலே பாடி வணங்கினர். உடனே வேதாரணியேசுரருடைய திருவருளினலே திருக்கதவு திறக்

கப்பட்டது. அப்பொழுது நாயன்மாரிருவரும் விழுந்து நமஸ்கரித்தார்கள். அடியார்க ளெல்லாரும் ஆநந்த கோஷஞ் செய்தார்கள். நாயன்மாரிருவரும் பேரின்ப வெள்ளத்தில் அமிழ்ந்தி எழுந்து, உள்ளே புகுந்து சுவாமி தரிசனஞ் செய்து திருப்பதிகங்கள் பாடி அரிதில் வெளியே வந்தார்கள்.

அப்போது திருநாவுக்கரசு நாயனுர் திருஞானசம் பந்தமூர்த்தி நாயனுரை நோக்கி "சுவாமியுடைய திரு வருளினுலே இந்தத் திருக்கதவு திறக்கப்பட்டும் அடைக் கப்பட்டும் என்றும் வழங்கும்பொருட்டு, தேவரீர் இது அடைக்கப்படும்படி திருப்பதிகம் பாடியருளும்" என் ருர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் திருப்பதிகத் திலே முதற் பாட்டுப் பாடியமாத்திரத்திலே திருக்கதவு அடைக்கப்பட்டது. அதுகண்டு நாயன்மா ரிருவரும் திருவருளை வியந்து களிப்புற்று வணங்கினுர்கள். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் தாம் எடுத்த திருப்பதிகத்தை முடித்தருளினுர். அன்று தொடுத்து அந்தத் திருக்கதவு திறத்தலும் அடைத்தலும் ஆகிய வழக்கம் என்றும் நிகழ்வதாயிற்று. அங்கே நிகழ்ந்த அற்புதத்தைக் கண்ட அடியார்களெல்லாரும் ஆச்சரி யங்கொண்டு உரோமஞ் சிலிர்ப்ப, கண்ணீர் சொரிய நாயன்மா ரிருவருடைய திருவடிகளிலும் விழுந்து வணங்கினுர்கள்.

வேதவனப் பெருமான் அப்பர் சுவாமிகளைத் திரு வாய்மூருக்கு வரும்படி கனவிற் கட்டளையிட்டுத் தாம் சற்றுத் தூரத்தில் முன் செல்ல, அப்பரும் பின் தொடர்ந்து சென்று அவ்வூரை யடைதலும், முன் சென்ற மறைக்காட்டிறைவர் மறைந்தருளினுர். அப்பர்

திருவாய்மூருக்குச் செல்கின்றாரென்பதை யறிந்து, ஆளுடைய பிள்ளையாரும் அத்தலத்தைச் சென்றடைந்தார். அப்பொழுது பரமசிவனார் சமயகுரவ ரிருவருக்கும் காட்சிகொடுத்தருளினார்.

நாயன்மாரிருவரும் திருவாய்மூர்ப் பெருமானாரை வணங்கித் துதித்துத் திருமறைக்காட்டிற்கு மீண்டு அத்தலத்திற் சிலநாள் இருந்தனர்; அங்ஙனம் இருக்கும்போது, பாண்டி நாட்டிலே பரந்துள்ள சமண சமயத்தைக் கெடுத்துச் சைவசமயத்தை நாட்டுதற்கு எழுந்தருளி வருதல் வேண்டுமென்று பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் சம்பந்த சுவாமிகளுக்கு விண்ணப்பமனுப்ப, சுவாமிகள் நாவுக்கரசரிடம் விடை பெற்றுக்கொண்டு பாண்டி நாட்டுக்குப் புறப்பட்டுச் செல்ல, நாவுக்கரசர் சோழ நாட்டிலேயே சிலநாள் தங்கியிருந்தார்.

பின்னர் அப்பர் சுவாமிகள் திருநாகைக்காரோணம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு பழையாறை வடதளி என்னுந் தலத்தையடைந்தார்; அங்குள்ள சமணர்கள் அச்சிவாலயத்திலுள்ள சிவலிங்கப் பெருமானை அன்பர்கள் காணாவண்ணம் மறைத்து, அத்தலத்தைத் தம் பள்ளியாக்கிக்கொண்டார்கள்; சிவலிங்கப் பெருமானைத் தரிசித்தல்லாமல் தாம் அந்த இடத்தைவிட்டுப் போவதில்லையென்று அப்பர் சுவாமிகள் உண்ணாவிரதம் பூண்டு கிடப்ப, வடதளிப் பெருமான் சோழராசனுக்கு அந்நிலைமையைச் சொப்பனாவத்தையிலே தெரிவிக்க, சோழராசன் அச்சமணர்களைக் கடிந்து, அப்பர் சுவாமியைச் சிவலிங்க தரிசனஞ் செய்யும்வண்ணம் செய்தான். சிவலிங்கப் பெருமானைத் தரி

சித்தவுடனே அப்பர் சுவாமிகள் "தலையெலாம் பறிக்குஞ் சமணகையர்" என்றற்றொடக்கத்த தேவாரப் பதிகத்தைப் பாடி வணங்கி மகிழ்ந்து, அத்தலத்தை விட்டகன்று பின்னரும் பல தலங்களை அடைந்து வணங்கித் துதித்துத் திருப்பைஞ்ஞீலி யென்னுந் தலத்தை நோக்கிச் செல்வாராயினர்.

அத்தலத்தை நோக்கி நடந்துசென்ற அப்பருக்கு அதிக பசியும் இளைப்புமுண்டாக, அவற்றால் அவர் வருந்துவதைத் திருவுள்ளத்திற் கொண்டு, பைஞ்ஞீலிப் பெருமானார் ஆதிசைவ வேதியர்போல் எழுந்தருளித் தம் திருக்கரத்திற் பொதிசோறு பரித்தவராய், அப்பர் சுவாமிகள் வரும் மார்க்கத்திலுள்ள சோலையில் நின்றார்; பசி தாகம் இளைப்பு என்னுமிவற்றால் வருந்தி வழிநடந்துவரும் அப்பர் சுவாமிகளை, மறையவர் வேடங்கொண்ட பெருமானார் உபசரித்து அவருக்கு உண்ண அன்னமிட்டு, குடிக்கத் தண்ணீரும் வார்த்தார். பரமசிவன் தம் மெய்யடியாரிடத்து வைத்த கருணை யிருந்தபடி யென்னே!

அப்பர் சுவாமிகள் சிலநாள் திருப்பைஞ்ஞீலியில் எழுந்தருளிய அப்பெருமானாரை வணங்கித் திருப்பதிகம் பாடி, உழவாரத் தொண்டுஞ் செய்து, பின் திருவண்ணாமலையை யடைந்து உண்ணாமுலை யம்மையாரோடு எழுந்தருளிய அண்ணாமலையாரை வணங்கித் தேவாரப் பதிகம்பாடி, தியானிக்க முத்திதரும் திருவண்ணாமலையை விட்டகன்று, தொண்டை நாட்டிற்குச் சென்று அங்குள்ள திருவேகம்பம், திருக்கச்சி மயானம், திருமேற்றளி, திருமாற்பேறு என்னுந் தலங்களை வணங்கிக்கொண்டு, தென் கைலாசமாகிய காளத்தி

மலையை அடைந்தார். அங்கே பொன்முகலியிலே ஸ்நானம்செய்து, மலையின்மேல் ஏறி, சுவாமியை வணங்கித் தேவாரப் பதிகம் பாடி, அவருடைய வலப்பக்கத்திலே நிற்கின்ற கண்ணப்ப நாயனாருடைய திருவடிகளை வணங்கி, சிலநாள் அந்த ஸ்தலத்திலே வாழ்ந்தார்.

தென்கயிலை யெனப்படும் திருக்காளத்தியிலிருக்கும்போதே, வடகயிலைக்குச் செல்லவேண்டு மென்னும் விருப்பம் அப்பர் சுவாமிகளின் உள்ளத்திற் பிறந்தது. அதனால் அவர் அடியார்களோடு திருக்காளத்தித் தலத்தை விட்டகன்று வடதிசையை நோக்கிச் சென்று ஸ்ரீபருப்பதத்தையடைந்து அங்கே கோயில்கொண்டருளிய இறைவனை வணங்கிப் பதிகம் பாடித் துதித்துக் காசியையடைந்து விசாலாட்சி சமேத விசுவநாதப்பெருமானை வணங்கிக்கொண்டு, அதற்கப்பா லுள்ளதாகிய கற்சுரத்திலே சாகமூலபலங்கள் புசித்தலையும் ஒழித்து, திருக்கைலாச தரிசனஞ் செய்யவேண்டு மென்னும் பேரார்வங் கொண்டவராய், அல்லும் பகலும் நடந்தார். அதனால் அவருடைய பாதங்கள் பரடுவரைக்குந் தேய்ந்தன. தேய்ந்தும் ஆசை மேலீட்டினால் தம்முடைய இரண்டு கைகளையும் ஆதரவாகக் கொண்டு தாவிச் சென்றார். அந்தக் கைகளும் மணிக்கட்டு அசைந்து கரைந்து சிதைந்தன. பின்னும் ஆசை சிறிதுங் குன்றுதலின்றி மேலிடுதலால் கொடிய நெருப்பையொத்த வெவ்விய பருக்கைக் கற்கள் பொருந்திய மார்க்கத்தில் மார்பினால் நகர்ந்து போயினர். மார்பும் தசை நைந்து சிந்த, எலும்புகளும் முரியலுற்றன. பின் புரண்டு புரண்டு போயினார். அதனால் தேகமுழுதும் அரைய, நாயனார் திருக்கைலாசகிரியினிடத்தே பதிந்த அன்பின் உறுதியினால், மெல்ல நகருதற்கு முயன்றும் கூடாமையால் வழியிலே கிடந்தார்.

அப்பொழுது பரமசிவன் அப்பமூர்த்தியை மீளவும் தமிழ்நாட்டிற் செலுத்தி அந்நாட்டிலுள்ளோர் உய்யும் பொருட்டுத் தமிழ்வேதமாகிய தேவாரம் பாடுவித்தற்கும், அவ்வப்பமூர்த்தியுடைய கருத்தை மாறின்றி முடித்தற்குந் திருவுளங்கொண்டு, அவ்விடத்தில் ஒரு தடாகத்தை உண்டாக்கி, ஒரு முனிவர்வடிவங் கொண்டு அந்நாயனுருக்கு முன் வந்து நின்று, "நீர் அங்கங்கள் எல்லாஞ் சிதைந்துபோக வருத்தத்தோடும் இந்தக் கொடிய காட்டில் எதன்பொருட்டு வந்தீர்" என்று கேட்டார்; அப்பமூர்த்தி மரவுரியாடையையும் பூணூலையும் சடைமுடியையும் விபூதிப்பூச்சையு முடைய அந்த முனிவரைக் கண்டபொழுதே பேசுதற்கு அற்ப சத்தியுண்டாக, அவரை நோக்கி, "முனிவரே, நமது கடவுளாகிய பரமசிவன் உத்தரகைலாசத்திலே உமா தேவி சமேதராய் வீற்றிருக்கின்ற திருக்கோலத்தைத் தரிசித்து வணங்கும்பொருட்டு விரும்பி வந்தேன்" என்றார். அதற்குமுனிவர், "தேவர்களாலும் அடைதற்கு அரியதாகிய கைலாசகிரி, மனிதர்களால் அடையப்படுதற்கு எளிதா? நீர் இந்தக் கொடுஞ் சுரத்திலே வந்து என் செய்தீர்! இனித் திரும்பிவிடுதலே உத்தமம்" என்றார்.

உடனே அப்பமூர்த்தி "அக் கைலாசகிரியி லிருக்கின்ற சிவபெருமானுடைய திருக்கோலத்தைத் தரிசித்தன்றி அநித்தியமாகிய இந்தத் தேகத்தைக் கொண்டு மீளேன்" என்று மறுத்தார். சுவாமி அவருடைய துணிவைக் கண்டு மறைந்தருளி ஆகாயத்தில் அசரீரியாகி "நாவுக்கரசனே, எழுந்திரு" என்றார். உடனே அப்பமூர்த்தி அழிந்த உறுப்புக்களெல்லாம் முன்போல நிரம்பப்பெற்றுச் சிறந்த திருமேனியோடும் எழுந்து,

"சுவாமி, தேவரீர் அக் கைலாசகிரியில் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோலத்தை அடியேன் தரிசித்து வணங்கும் பொருட்டு அருள் செய்யும்" என்று பிரார்த்தித்தார். அப்பொழுது பரமசிவன் "நீ இந்தத் தடாகத்திலே முழுகித் திருவையாற்றை அடைந்து, நம்மைக் கைலாசகிரியில் வீற்றிருந்தபடி அந்த ஸ்தலத்திலே தரிசித்து வணங்கு" என்று பணித்தருளினூர்.

அப்பமூர்த்தி அப் பணியைச் சிரமேற்கொண்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஓதித் தடாகத்திலே முழுகி, திருவையாற்றிலிருக்கின்ற ஓர் வாவியின்மேலே தோன்றிக் கரையிலேறி, வழியிலே அந்தப் பதியிலுள்ள சராசரங்கள் தங்கள் தங்கள் துணையோடும் பொலிதலைக் கண்டு, அவைகளைச் சிவமுஞ் சத்தியுமாகப் பார்த்து வணங்கிக் கொண்டு, ஆலயத்திற்கு முன்னே சென்றூர். அவ்வாலயம் கைலாசகிரியாக, அதனிடத்தே வேதங்களும் சிவாகமங்களும் இரு பக்கத்திலும் வாழ்த்தவும், தும்புரு நாரத ரென்னும் இருவர் யாழ் வாசிக்கவும், பிரம விஷ்ணுக்க ளிருவரும் வஸ்திரத்தை ஒதுக்கி வாயைக் கையினுலே பொத்திக்கொண்டு ஒதுங்கிநின்று தம் குறைகளை முறையிடவும், பூதகணங்கள் கடைதோறும் காக்கவும், தேவர் சித்தர் அசுரர் சாரணர் காந்தருவர் கின்னரர் இயக்கர் விஞ்சையர் முதலாகிய கணத்தவர்கள் துதிக்கவும், நந்திதேவர் கையிலே பிரம்பைப் பரித்துக் கொண்டு பணிசெய்யவும், காருண்ணிய ஸ்வரூபியாகிய சிவபெருமான் ஓர் திவ்விய ஆசனத்தின்மேலே அநந்த கோடி சூரியப் பிரகாசத்தோடும் பார்வதி சமேதராய் வீற்றிருந்தருளினர். அப்படி யிருத்தலை அப்பமூர்த்தி கண்டமாத்திரத்திலே விழுந்து நமஸ்கரித்து, உரை தடுமாற, உரோமஞ் சிலிர்ப்ப, ஆநந்தவருவி சொரிய,

கரையிறந்த அருட்பெருங் கடலிலே அன்புநதி ஈர்த்துச் செல்ல, மிதந்துபோய்த் தெவிட்டுதலில்லாத அளவிறந்த சிவானந் தாமிர்தத்தைப் பருகி சந்நிதானத்திலே ஆநந் தக் கூத்தாடித் திருத்தாண்டகங்கள் பாடினார் கைலாச பதியாகிய கடவுள் தம்முடைய திருக்கோலத்தை இப்படி அப்பமூர்த்திக்குத் தரிசிப்பித்து, பின் மறைந் தருள, அவ் வப்பமூர்த்தி மனம்வருந்தி, பின் ஒருவாறு தெளிந்து, தேவாரப் பதிகங்கள் பாடிக்கொண்டு அந்தப் பதியில் இருந்தார்.

சிலநாட் சென்றபின் ஐயாற்றினின்று நீங்கி நெய்த் தானம், மழபாடி முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு, திருப்பூந்துருத்தியை அடைந்து சுவாமிதரிசனஞ் செய்து தேவாரப் பதிகங்கள் பாடி, அங்கே ஒரு திருமடங் கட்டுவித்து, பல்வகைத்தாண்டகம், தனித்தாண்டகம், அடைவுதிருத்தாண்டகம், திருவங்கமாலை முதலிய தேவாரப் பதிகங்களைப் பாடிக்கொண்டிருந்தார். இருக் கும்பொழுது, பாண்டிநாட்டிற் சென்று, சமணர்களை வாதில் வென்று சைவஸ்தாபனப்பண்ணிப் பாண்டிய ராஜனுடைய கூனை நிமிர்த்தியருளிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் அந்நாட்டினின்றும் நீங்கி, சோழமண்ட லத்தை யடைந்து அப்பமூர்த்தி பூந்துருத்தியி லிருப் பதைக் கேள்வியுற்று அதற்குச் சமீபத்திலே வந்தருளி னார். அதை அப்பமூர்த்தி அறிந்து மனமகிழ்ந்து அவரை எதிர்கொண்டு வணங்கும்படி சென்று, அவர் வரும் எல்லையை யடைந்து, திருச்சின்னத்தின் ஓசையைக் கேட்டு, அவரைத் தரிசிக்கும்படி சூழ்ந்த அடியார்க ளுடைய நெருக்கத்தினாலே தம்மை எவரும் இன்னா ரென்று அறியாதபடி உட்புகுந்து, அவர் ஏறிவரும்

முத்துச் சிவிகையைத் தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கிக்கொண்டு வந்தார்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் அப்பூந்துருத்தியைச் சமீபித்தவுடனே, "அப்பர் எங்குற்றூர்" என வினவ, அதைக் கேட்ட அப்பமூர்த்தி, "அடியேன் தேவரீரைத் தாங்கிவரும் பெருவாழ்வுற்று இங்குற்றேன்" என்றூர். கேட்ட திருஞானசப்பந்தமூர்த்தி நாயனர் உடனே சிவிகையினின்றும் இறங்கி, மனப்பதைப்போடு அப்பமூர்த்தியை வணங்க, இவரும் தம்மை அவர் வணங்குதற்கு முன் தாம் அவரை வணங்க, அது கண்ட அடியார்களெல்லாரும் வணங்கி ஆனந்தகோஷஞ் செய்தார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் வாகீசரோடும் திருப்பூந்துருத்தியிற் சென்று சுவாமிதரிசனஞ் செய்துகொண்டிருந்தார். திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் தாம் பாண்டிநாட்டிற் சென்று சமணர்களை வாதில் வென்றதையும், பாண்டியனுடைய கூனை நிமிர்த்ததையும், அந்நாடெங்கும் விபூதியை வளர்த்ததையும், பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியார் மந்திரியாராகிய குலச்சிறைநாயனர் என்கின்ற இருவருடைய பெருமையையும், வாகீசருக்குச் சொல்லியருளினர். வாகீசர் தாந் தொண்டைநாட்டிற்குச் சென்று அங்குள்ள சிவஸ்தலங்களை வணங்கியதைத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனருக்குச் சொல்லியருளினர்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் தொண்டைநாட்டுக்கு யாத்திரை செய்ய விரும்பித் திருப்பூந்துருத்தியினின்றும் புறப்பட, வாகீசர் பாண்டிநாட்டுக்கு யாத்திரை செய்ய விருப்பிப் புறப்பட்டு, அப்பாண்டிநாட்டை அடைந்து, திருப்புத்தூரை வணங்கிக்

கொண்டு, மதுரையிற் சென்று சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடி, பாண்டிமாதேவியாரும் கூனிமிர்ந்த பாண்டியரும் குலச்சிறைநாயனூரும் வந்து வணங்கித் துதிக்க, சிலநாள் அங்கிருந்தார். பின் மதுரையை நீங்கி திருப்பூவணம், இராமேச்சரம், திருநெல்வேலி, கானப் பேரூர் முதலாகிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, சோழமண்டலத்துக்குத் திரும்பி வந்து, திருப்புகலூரை அடைந்தார்.

அப்புகலூரிலே தினந்தோறும் சுவாமிதரிசனம் பண்ணி, திருமுன்றிலிலே கைத்தொண்டு செய்து கொண்டிருந்தார். இருக்கு நாட்களிலே நின்றதிருத் தாண்டகம், தனித்திருத்தாண்டகம், க்ஷேத்திரக் கோவை, குறைந்த திருநேரிசை, தனித் திருநேரிசை, நினைந்த திருநேரிசை, ஆருயிர்த் திருவிருத்தம், தச புராணத்தடைவு, பாவநாசப் பதிகம், சரக்கறைத் திரு விருத்தம் முதலிய திருப்பதிகங்களைப் பாடினூர். பரம சிவன் அந்நாயனூருடைய வைராக்கியத்தை எவருக்குங் காட்டுவதற்குத் திருவுளங்கொண்டு, அவர் திருமுன்றி லிலே கைத்தொண்டு செய்யும்பொழுது உழவாரம் நுழைந்தவிடங்க ளெங்கும் பொன்னும் நவரத்தினங் களும் பிரகாசித்துக் கிடக்கும்படி அருள் செய்தார். நாயனூர் அவைகளைக் கண்டு, அவைகளை அங்கே கிடக் கின்ற பருக்கைக் கற்களோடு சமமாக எண்ணி உழவா ரத்தில் ஏந்திக் குளத்திலே விழ எறிந்துவிட்டார்.

பின்பு கடவுளுடைய அருளினூல் அரம்பையர்கள் சுவர்க்கத்தினின்றும் இறங்கி வந்து, நாயனூர்முன் நின்று இசைபாடியும், கூத்தாடியும் அவர்மேற் பூக்களைப் பொழிந்தும், அவரை அணைபவர்கள்போலச் சமீபித்

தும், அளகம் அவிழ இடை நுடங்க ஓடியும், மீண்டும், வஸ்திரம் நெகிழ நின்றும், இப்படி அவரை மோகிப்பித்தற்கு எத்தனஞ் செய்தார்கள். செய்தும், சிவபிரானுடைய திருவருளையே முன்னிட்டு ஒழுகுகின்ற வாகீசர், தம்முடைய சித்தநிலை சிறிதும் வேறுபடாதபடி, தாஞ் செய்யுந் திருப்பணியிலே உறுதிகொண்டு, இருவினை முதலியவைகளை முன்னிலைப்படுத்தி "நான் திருவாரூரில் வீற்றிருக்கின்ற சுவாமிக்கு ஆளானேன்; உங்களாலே நான் ஆட்டுண்ணேன்; நீங்கள் என்னை அலையன்மின்" என்னுங் கருத்தால் "பொய்ம்மாயப் பெருங்கடலில்" என்னுந் திருத்தாண்டகத்தைப் பாடினார். அரம்பையர்கள் தங்கள் கருத்து முற்றுமையால், அவரை நமஸ்கரித்துக்கொண்டு போய்விட்டார்கள். இந்த நிலைமையைச் சகல லோகத்தார்களும் அறிந்து துதிக்கலுற்றார்கள்.

வாகீசர் "புகலூரர் என்னை இனிச் சேவடிக்கீழிருத்திடும்" என்று எழுகின்ற ஞானத்தினால், திருவிருத்தங்கள் பலவற்றைப் பாடி, ஒரு சித்திரைமாசத்திலே சதய நக்ஷத்திரத்திலே "எண்ணுகேனென்சொல்லி யெண்ணுகேனே" என்று திருத்தாண்டக மெடுத்து, இறுதிதோறும் "உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே" எனப் பாடிச் சிவபெருமானுடைய திருவடியை அடைந்தார்.

---

# சுந்தரமூர்த்தி நாயனார் வரலாறு

"ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட்
டாட்கொண்ட வுவனைக் கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட
வல்லாள னெல்லா முய்யப்
பெருமணச்சீர்த திருத்தொண்டத் தொகைவிரித்த
பேரருளின் பெருமா னென்மங்
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமா
ளேமதுகுல தெய்வ மாமால்."

திருக்கைலாசமலையிலே உலக மாதாவாகிய உமா தேவியாரோடும் எழுந்தருளி யிருக்கின்ற பரமசிவ னுடைய அடியார் கூட்டத்துள் ஒருவராகிய ஆலால சுந்தரர் என்பவர், ஒருநாள் பரமசிவனுக்குச் சாத்தும் பொருட்டுப் பூக்கொய்யும் வண்ணம் அந்த மலைச்சார லில் உளதாகிய பூந்தோட்டத்திற்குப் போனார். போன போது பார்வதி தேவியார்க்குத் தரிக்கும்பொருட்டு அப் பூந்தோட்டத்திலே பூக் கொய்துகொண்டு நின்ற, அம்மையாருடைய சேடியர்களாகிய அநிந்திதை, கம லினியென்னும் இருவரையுங் கண்டு அவர்கள்மேல் ஆசைவைத்தார். அவர்களும் ஆலாலசுந்தரர்மீது காதல் கொண்டார்கள். பின்னர் ஒருவாறு தம் மனசைத் திருப்பிப் பூக்களைக் கொய்துகொண்டு ஆலாலசுந்தரர் சிவசந்நிதானத்தையடைய, அப்பெண்களிருவரும் தேவி சந்நிதானத்தை யடைந்தார்கள்.

அப்பொழுது, சர்வான்மாக்களிடத்திலும் வியாபித் திருந்து, அந்த அந்த ஆன்மாக்கள் மனம் வாக்குக் காயங்

களினாலே செய்கின்ற கர்மங்களை அறிந்து அந்த அந்தக் கர்மங்களுக்கு ஏற்ற பலங்களை ஊட்டி, அக்கர்மங்களைத் தொலைப்பிக்கின்ற காருண்ணியவருபியாகியகடவுளானவர், ஆலாலசுந்தரரை நோக்கி, "நீ பெண்கள்மேல் இச்சை கொண்டபடியால், தக்ஷணபூமியிலே மானுடதேகமெடுத்துப் பிறந்து அந்தப் பெண்களோடு கூடி இன்பம் அனுபவிப்பாய்" என்று திருவாய்மலர்ந்தருளினர். அதைக் கேட்ட ஆலாலசுந்தரர் மனங்கலங்கிச் சந்நிதானத்திலே அடியற்ற மரம்போலச் சாஷ்டாங்கமாக வீழ்ந்து நமஸ்காரம்பண்ணி எழுந்துநின்று, அஞ்சலியஸ்தராகி "எம் பெருமானே, தேவரீருடைய அருமைத் திருவடிகளைப் பிரிதற்கு ஏதுவாகிய கொடும்பாவத்தைச் செய்தவனாகிய சிறியேன் மயக்கம் பொருந்திய மனிதப் பிறப்பை எடுத்து, செய்யவேண்டியது இன்னது என்றும், நீக்க வேண்டியது இன்னது என்றும் அறியாது, பிரபஞ்ச வாழ்க்கையிலே மயங்கும்போது, தேவரீர் வெளிப்பட்டு வந்து, அடியேனைத் தடுத்து ஆட்கொண்டருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, வேண்டுவார் வேண்டியவைகளை ஈந்தருளுங் கடவுளும் அவ்வேண்டுகோளுக்கு இசைந்தருளினர்.

பின்னர் ஆலாலசுந்தரர் இப்பூமியிலுள்ள பரத கண்டத்திலே தமிழ்நாடாகிய தென்னாட்டைச் சேர்ந்த திருமுனைப்பாடி நாட்டிலுள்ள திருநாவலூர் என்னும் திருப்பதியிலே ஆதிசைவப் பிராமண குலத்தில், சடையனாரென்பவருடைய மனைவியாராகிய கற்பிற் சிறந்த இசைஞானியாரிடத்தில் உதித்தனர். பெரியோர் அக் குழந்தைக்கு நம்பியாரூரர் எனப் பெயரிட்டனர். அக் குழந்தை அயலிலுள்ள வீதியிலே சிறுதேருருட்டி விளையாடும்போது, அந்நாட்டுக்கு அரசராகிய நரசிங்க

முனையரென்பவர் அக்குழந்தையைக் கண்டு ஆசை கொண்டாராய், குழந்தையின் பிதாவாகிய சடையனு ரிடம் போய் அப்பிள்ளையைத் தமக்குத் தத்த புத்திர ராகத் தரும்படி கேட்டுப் பெற்றுக்கொண்டு போய் அவரை அபிமான புத்திரராய் வளர்த்து வந்தார். பிள்ளையார் அரசர் மாளிகையில் வளர்ந்து வந்தன ரெனினும், பிராமண வருணத்துக்குரிய ஒழுக்கங்க ளுடனேயே வளர்ந்து, உரிய காலத்திலே பூணூல் தரிக் கப்பெற்று வேதங்களையோதிச் சகல கலைகளையும் சந் தேக விபரீதமறப் படித்து வரலாயினர்.

நம்பியாரூரர் மணஞ் செய்தற்குரிய பருவத்தை யடைதலும், பிதாவாகிய சடையனூர் தம்முடைய மர பிற்கேற்ற மரபினராய், முன்னரும் தொடர்புடையவ ராய், புத்தூரில் வாழ்கின்ற சடங்கவி சிவாசாரியா ருடைய சிறந்த புதல்வியைத் தம்முடைய புத்திர ருக்கு மணம் பேசுவித்து நிச்சயித்தார். திருமணத்திற் காகிய சுபவேளையில் நம்பியாரூரர் திருமணக் கோலங் கொண்டு குதிரையின்மீதேறிச் சகல சிறப்புக்களோடும் புறப்பட்டுப் புத்தூரிலே பெண்வீட்டில் அமைக்கப் பெற்ற கலியாணப் பந்தரையடைந்து, குதிரையினின் றும் இறங்கி உட்சென்று ஆசனத்தில் வீற்றிருந்தார்.

அப்பொழுது பரமசிவன் தமது அன்பராகிய சுந்தரரை ஆட்கொண்டருளத் திருவுளங்கொண்டு, ஒரு வயோதிகப் பிராமணர்போல வேடம் பூண்டு, அப் பந்தரின்கண்ணே வந்தருளி நின்று, "இவ்விடத்தில் இருக்கின்ற எல்லீர்களும் நான் சொல்லும் இவ் வார்த்தையைக் கேளுங்கள்" என்று சொல்லியருளினூர். அப்படிச்சொல்லிய அந்த ஐயரை, விவாகஞ்செய்யத்

தொடங்கும் நம்பியாரூரரும் அங்கிருக்கின்ற மற்றைப் பிராமணர்களும் பார்த்து, "இவ்விடத்திலே நீர் சொல்ல விரும்பியதைச் சொல்லும்" என்றார்கள். அதைக் கேட்ட ஐயர் நம்பியாரூரரை நோக்கி, "எனக்கும் உனக்கும் ஒரு வழக்கு இருக்கின்றது. அதை முடித்துக் கொண்டு உன்னுடைய விவாகத்தை நடத்து" என்று அருளிச்செய்தார். நம்பியாரூரர் "உமக்கும் எனக்கும் ஒரு வழக்கு உளதாயின், அதை முடித்தன்றி நான் விவாகஞ் செய்யேன்; நீர் அவ் வழக்கு இன்னதெனச் சொல்லும்" என்று கேட்க, அந்த ஐயர் பிராமணர்களைப் பார்த்து, "இந்தத் திருநாவலூரனாகிய நம்பியாரூரன் எனக்கு அடியவன்" என்று சொல்லியருளினார். அதைக் கேட்ட நம்பியாரூரர் "இந்த ஐயர் சொன்ன வார்த்தை நன்றாயிருக்கின்றது" என்று இகழ்ச்சியாகச் சொல்லிச் சிரிக்க, பிராமணவேடங்கொண்ட கடவுள் அவருக்குச் சமீபத்திலே போய், "அக்காலத்திலே உன் னுடைய பாட்டன் எனக்கு எழுதித்தந்த அடிமை யோலை இதுவே. அப்படியிருக்க, இந்தக் காரியத்தைக் குறித்து நீ பரிகாசம்பண்ணியது என்ன" என்றார்.

உடனே நம்பியாரூரர் ஐயரைப் பார்த்து, "பிரா மணருக்குப் பிராமணர் அடிமையாதலை, இன்றைக்கு நீயே சொல்லக் கேட்டோம்; நீ பித்தனோ" என்று சொல்ல, ஐயர் "நான் பித்தனானாலும் ஆகுக; பேய னானாலும் ஆகுக; நீ இப்போது எத்தனை வசை மொழிகளைச் சொன்னாய்; அவைகளினால் நான் சிறி தாயினும் வெட்கம் அடையேன்; நீ என்னைச் சிறிதும் அறிந்திலை. இப்படி நின்று விளையாட்டு மொழிகள் பேசவேண்டாம். அடிமைத்தொழில் செய்ய வா" என்

ரூர். அப்பொழுது நம்பியாரூரர் "இவர் அடிமையோலை ஒன்று உண்டென்றாரே, அதன் உண்மையை அறிய வேண்டும்" என்று நினைந்து, "ஐயரே, உம்முடைய ஓலையைக் காட்டும்" என்று சொல்ல, ஐயர் "நீ இந்த ஓலையைப் பார்த்து நிச்சயிக்கத் தக்கவனோ? நான் இந்தச் சபையாருக்கு ஓலையைக் காட்டி மெய்யென்று அங்கீகாரஞ் செய்வித்தபின், எனக்கு ஊழியஞ் செய் தற்கு மாத்திரம் தக்கவன்" என்றார்.

அதுகேட்ட நம்பியாரூரர் கோபங்கொண்டு, அவர் கையில் இருக்கும் ஓலையைப் பறிக்கும்படி அவருக்கு எதிரே விரைந்து சென்றபோது, அவர் ஓட, தாமும் ஓடி, அவரைப் பின்றொடர்ந்து பிடித்து, ஓலையைப் பறித்து, "பிராமணர்கள் அடிமையாய் ஊழியஞ் செய் தல் என்ன முறை" என்று சொல்லிக் கிழிக்க, ஐயர் சுந்தரமூர்த்தியைப் பிடித்துக்கொண்டு, "இது முறை யோ" என்று ஒருதரம் சத்தமிட்டார். சமீபத்தில் நின்றவர்கள் அவ்விருவரையும் விலக்கி, "உலகத்திலே ஒருகாலமும் நடந்திராத ஏற்பாட்டைக்கொண்டு வழக் காடுகின்ற பிராமணரே! நீர் எங்கே இருக்கின்றவர்? சொல்லும்" என்றார்கள். அதற்கு ஐயர் "நான் இந்தத் திருவெண்ணெய்நல்லூரில் இருக்கிறவன்; அது நிற்க, இந்த நம்பியாரூரன் தருமவழிக்கு விரோதமாக வலாற் காரம்பண்ணி என் கையில் ஓலையைப் பறித்துக் கிழித் ததினாலே, தான் எனக்கு அடியவன் என்றதை ஸ்திரப் படுத்தினான்" என்றார்.

அப்பொழுது சுந்தரமூர்த்திநாயனார் "நீர் திருவெண் ணெய்நல்லூரில் இருக்கிறவராகில், இந்த வழக்கை அங்கேதானேபேசித் தீர்ப்புச்செய்ய வாரும்" என்று

சொன்னார். ஐயர் அதைக்கேட்டு "திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்ற பிராமணர்களுக்கு முன்னே ஆதியில் எழுதப்பட்ட மூலவோலையைக் காட்டி, நீ எனக்கு அடிமை என்பதைச் சாதிப்பேன்" என்று சொல்லித் தண்டை ஊன்றிக்கொண்டு முந்தி நடந்தார். சுந்தரமூர்த்தியும் மற்றைப் பிராமணர்களும் பின்னே போனார்கள்.

ஐயர் தம்மைத் தொடர்ந்து வந்த சுந்தரமூர்த்தியாரோடும் ஏனைய பிராமணர்களோடும் திருவெண்ணெய் நல்லூரை யடைந்து, அங்குள்ள பிராமணர் சபையிலே சென்று அவர்களை நோக்கிச் "சபையோர்களே! திருநாவலூரில் உள்ள இந்த ஆரூரன் எனக்கு அடிமையென்று நான் காட்டிய ஓலையைப் பறித்துக் கிழித்துவிட்டு இங்கேவந்துநிற்கின்றான்" என்று முறையிட்டார். சபையில் இருந்த அப்பிராமணர்கள் சிரித்து "பிராமணனுக்குப் பிராமணன் அடிமையானதை நாங்கள் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை" என்றார்கள். அதற்கு ஐயர் "நான் பொய் வழக்குக் கொண்டுவரவில்லை. நான் சொல்வது நிசம்; இவன் பறித்துக் கிழித்த ஓலை, தன் மரபினரும் தானும் எனக்கு அடிமையென்று இவனுடைய பாட்டன் எழுதித் தந்த ஓலையாகும்" என்றார்.

சபையோர் சுந்தரரை நோக்கி, "இந்த ஐயர் காட்டிய ஓலையை நீர் பறித்துக் கிழித்தது மெய்தானா" என்று கேட்க, சுந்தரர் "ஓம்" என்றார். "அப்படியானால் நீர் அந்த ஓலையைப் பறித்துக் கிழித்தமையே, நீர் இவருக்கு அடிமை யென்பதைக் காட்டுகின்றதே" என்று கூறி, ஐயரைப் பார்த்து "இவர் உமக்கு அடிமை யென்பதை

எங்கள் முன்னிலையில் அனுபவம், லிகிதம், சாட்சி என்கின்ற இந்த மூன்றனுள் ஒன்றினாலேனும் தாபித்தல் வேண்டும்" என்றார்கள். அப்பொழுது ஐயர் "இவன் பறித்துக் கிழித்த ஓலை மூல ஓலையைப் பார்த்து எழுதிய படியோலையாகும். மூலவோலை என்னிடத்தில் இருக்கின்றது. "ஆனால், அதனையும் இந்த ஆரூரன் பறித்துக் கிழியாவண்ணம் நீங்கள் இவனைத் தடுத்தல்வேண்டும்" என்றார். சபையோர் அதற் கிசைந்தார்கள். உடனே ஐயர் மூலவோலை என்று ஒரு ஓலையெடுத்து ஒரு கரணன் கையிற் கொடுக்க, அவன் அந்த ஓலையை வணக்கத்துடன் வாங்கி விரித்துச் சபையோ ரனைவரும் கேட்கும்படி "திருநாவலூரில் இருக்கின்ற ஆதி சைவனாகிய ஆரூரன் என்கின்ற நான், திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு நானும் என் சந்ததியாரும் வழித்தொண்டு செய்வதற்கு உள்ளும் புறமும் ஒப்ப உடன்பட்டு எழுதிக் கொடுத்தேன். இப்படிக்கு ஆரூரன்" என்று வாசித்தான். பின்பு அந்த ஓலையிலே சாட்சிகளாகக் கையெழுத்திட்டவர்கள் தங்கள் கையெழுத்தென்றே ஒத்துக்கொண்டார்கள்.

அதைக்கண்ட பிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி "இது உமது பாட்டனுடைய எழுத்தோ? பாரும்" என்று சொல்ல, ஐயர் அவர்களைப் பார்த்து, "இந்தச் சிறுவன் அடிமையோலையில் எழுதப்பட்டிருக்கின்ற தன் பாட்டன் கையெழுத்தைக் கண்டறியச் சக்தியுள்ளவனோ? இவனது பாட்டன் எழுதிய வேறு கைச்சாத்து உண்டேல், வருவித்து, இதனுடன் ஒத்துப் பார்த்து, உங்கள் மனசிலே தோன்றிய தீர்ப்பைச் சொல்லுங்கள்" என்றார். அதைக் கேட்ட பிராமணர்கள் சந்தேகந் தெளியும்படி, சுந்தரமூர்த்தி சமுகத்திலே

அவர் பாட்டனூர் எழுதிய கைச்சாத்து ஒன்று தருவித்து அதன் எழுத்தையும், அடிமையோலையின் எழுத்தையும் ஒத்துப் பார்த்து, "இவ்விரண்டும் ஒத்திருக்கின்றன. இனி நீர் தப்ப வழி இல்லை; நீர் இந்தப் பிராமணருக்குத் தோற்றுப்போனீர்; ஆதலால் அவர் கருத்தின்படி அவருக்கு ஏவல் செய்வதே கடன்." என்று சொன்னூர்கள். சுந்தரமூர்த்தி 'விதிமுறை இதுவேயானுல், நான் இதற்கு உடன்படாதிருத்தல் கூடுமோ" என்று சொல்லி நின்றூர்

அப்பொழுது பிராமணர்கள் அந்த ஐயரைப் பார்த்து "நீர் காட்டிய அடிமையோலையிலே, எங்கள் ஊரே உம்முடைய ஊராக எழுதப்பட்டிருக்கின்றது; ஆதலால் உமக்கு இவ்வூரிலே தலைமுறையாக இருக்கின்ற வீடும் ஸ்திதியும் காட்டும்" என்று சொல்ல, பிராமண வடிவங்கொண்ட கடவுள் "இத்தனை விருத்தர்களில் ஒருவரும் என்னுடைய வீடு முதலியவற்றை அறியாதிருப்பீரானுல், காட்டுகிறேன்; வாருங்கள்" என்று சொல்லி, சுந்தரமூர்த்தியும் பிராமணர்களும் பின்னே வர, தாம் அவ்வூரி லிருக்கின்ற திருவருட்டுறை என்னுஞ் சிவாலயத்தினுள்ளே போனூர். பின்பு சபையார் அவரைக் காணுது திகைத்து நின்றூர்கள்

இவ்வற்புதச் செயலையெல்லாம் கண்ணுற்ற சுந்தரமூர்த்திநாயனூர் "தமியேனை அடிமைகொண்ட பிராமணர் எங்கள் பரமசிவன் எழுந்தருளி யிருக்குப் திருக்கோயிலினுள்ளே புகுந்தமை என்ன ஆச்சரியம்" என்று நினைந்து, உள்ளமுருக தாம் மாத்திரம் தொடர்ந்து போய்க் கூப்பிட, பரமசிவன் பருவதவர்த்தனி சமேதராய் இடபாரூடராய் வெளிப்பட்டு "அன்பனே! நீ முன்னே நமக்குத் தொண்டனுயிருந்தாய். நீ பெண்கள்

மேல் இச்சை வைத்ததினுல் நம்முடைய ஆஞ்ஞையி ஞலே பூமியிலே பிறந்தாய். இப்பொழுது துன்பத்தைத் தருகின்ற சமுசார பந்தமானது உன்னைத் தொடராத படி, நாமே வலியவந்து உன்னைத் தடுத்து ஆட்கொண் டோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். அத் திரு வாக்கைக் கேட்டமாத்திரத்தே சுந்தரமூர்த்தி நாயனுர் சரீரம் முழுதும் உரோமஞ் சிலிர்ப்ப, கண்களினின்றும் நீர் பொழிய அடியற்ற மரம்போல நிலத்தில் வீழ்ந்து வணங்கி யெழுந்து இருகைகளும் தலைமேல் ஏறக் குவித்து நின்று ''கருணையங் கடலே! சுவாமி! ஒன் றுக்கும் பற்ருத தமியேனையும் மார்ச்சால சப்பந்தமாக வலியவந்து தடுத்தாட்கொண்டருளினீர். அடியேன் செய்த பிழைகளனைத்தையும் பொறுத்தருளல் வேண் டும்'' என்று இரந்தார்.

அப்பொழுது பெருமான் நாயனுரை நோக்கி ''அன் பனே, நமக்கு அன்பினேடு செய்யத்தக்க அருச்சனை பாட்டேயாகும். ஆதலால் எம்மீது தமிழ்ப்பாட்டுக்களைப் பாடுவாயாக'' என்று அருளிச்செய்ய, நாயனுர் கைகூப்பி வணங்கி ''அடியேன் தேவரீருடைய அநந்த குணங்களில் ஏதும் அறியேன்; என்ன சொல்லிப் பாடுவேன்'' என்று விண்ணப்பஞ் செய்தார். அப்போது சிவபெருமான் ''நீ என்னை முன்னே பித்தனென்று சொன்னுய்; ஆகையால் என்பெயர் பித்தனென்றே பாடு'' எனக் கூறி அருள்செய்ய, நாயனுர் ''பித்தா பிறைசூடி'' என் னுஞ் சொற்றெடரை முதலாகக்கொண்ட திருப்பதிகத் தைப் பாடியருளினுர். அதன் பின் கடவுளானவர் சுந்தரமூர்த்திநாயனுரை நோக்கி, ''தொண்டனே, நீ இன் னும் நம்முடைய புகழைக் குறித்துப் பலவகையாகப் பாடு'' என்று அருளிச்செய்து மறைந்தருளினர்.

அதுநிற்க, புத்தூரிலிருக்கின்ற சடங்கவி சிவாசாரி யாருடைய புத்திரியாரோ வெனில், கலியாணந் தவிர்ந்த தினுலே சுந்தரமூர்த்தி நாயனுரையே தியானஞ் செய்து கொண்டிருந்து, சில காலத்தின்பின் சிவ பதவியை யடைந்தார். அதன் பின்னர்ச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவருட்டுறை, திருநாவலூர், திருத்துறையூர் முதலிய திருப்பதிகளுக்குச் சென்று ஆங்காங்குக் கோயில் கொண் டருளிய பெருமானை வணங்கித் தேவாரப் பதிகம் பாடித் துதித்தார்.

சிதம்பர தரிசனஞ் செய்ய விரும்பிச் சுந்தரமூர்த்தி நாயனுர் பெண்ணை நதியைக் கடந்து, திருவதிகை வீரட் டானத்தில் திருநாவுக்கரசுநாயனுர் உழவாரப்படை கொண்டு திருத்தொண்டு செய்த தலமாதலின், அத் தலத்தில் அடிவைத்து நடக்க அஞ்சி அதன் அயலி லுள்ளதாகிய சித்தவட மடத்திற் சென்றிருந்தார். அன் றிரவு நாயனுர் அம் மடத்திற் படுத்துறங்கும்போது, பரமசிவன் ஒரு ஆதிசைவப் பிராமண வேடங்கொண்டு அம் மடத்திற் படுத்துத் துயில்வார்போல் நாயனுருக் குத் திருவடி தீட்சை செய்தருளினர். சிவபெருமான் தமக்குத் திருவடி தீட்சைசெய்து மறைந்தருளியமையை யுணர்ந்த சுந்தரமூர்த்திநாயனுர் அற்புதமடைந்தவராய், பரமசிவன் தம்மீது வைத்த கருணையை நினைந்து உள்ள முருகி "தம்மானை யறியாத சாதியாருளரோ" என்னுந் திருப் பதிகத்தைப் பாடினுர். பின்னர்த் திருமாணிக்குழி, திருத்தினைநகர் முதலாம் தலங்களை யடைந்து தேவாரத் திருப்பதிகங்கள் பாடித் தில்லையின் எல்லையை யடைந்து தூலலிங்கமாகிய திருக்கோபுரத்தை வணங்கி, திருக் கோயிலினுட் சென்று சபாநாயகரைத் தரிசித்துத் திருப் பதிகம்பாடி வணங்கினுர். அங்கே நடராஜமூர்த்தி திரு

வருளால் "நீ திருவாரூரில் உள்ள நமது தலத்திற்குவா" என்னும் அசரீரிவாக் கெழுதலும், நடராஜ மூர்த்தியை மீளவும் வணங்கிக்கொண்டு சிதம்பரத்தை வீட்டகன்று சீகாழிப்பதியை நோக்கிச் சென்றனர். அச் சீகாழிப் பதி ஆளுடையபிள்ளையார் அவதரித்த தலமாதலில் அத் தலத்தின் எல்லையுள் மிதிக்க உள்ளங் கூசியவராய், பரம சிவனை எல்லைப்புறத்து நின்று வணங்குதலும், பெருமான் காட்சிகொடுத்தருள, நாயனர் ஆநந்தமடைந்து "சாதலும் பிறத்தலும் தவிர்த்து" என்னுந் தேவாரத் திருப்பதிகத் தைப் பாடினர்.

பின்னர்ச் சுந்தரமூர்த்திநாயனர் திருக்கோலக்கா, திருப்புன்கூர், மாயூரம், அம்பர் மாகாளம்; திருப்புக லூர் முதலாம் தலங்களிற் சென்று இறைவனை வணங் கித் திருப்பதிகங்கள் பாடித் திருவாரூரைச் சமீபித்தனர். திருவாரூர்ப் பெருமானது ஆஞ்ஞைப்படி அத் தலத்தி லுள்ள அன்பர்க ளெல்லாரும் நம்பியாரூரர் ஆங்கு எழுந்தருளி வருவதை யுணர்ந்து, அவரை எதிர்சென்று வணங்கி யுபசரித்து அழைத்து வருவாராயினர். திரு வீதியில் வரும்போது சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'கரை யுங் கடலும்" என்னுந் தேவாரப் பதிகத்தைப் பாடிக் கொண்டு திருக்கோயிலை யடைந்து தேவாசிரய மண்ட பத்தைக் கண்டு பின்னர்ப் புற்றிடங் கொண்ட பெரு மானை வணங்கித் திருப்பதிகம் பாடினர். அப்போது புற் றிடங்கொண்ட பெருமான "ஆரூரனே! நாம் உனக்குத் தோழரானேம்; நீ முன்னர்க் கொண்ட மணக்கோலத் துடன் எப்பொழுதும் வாழ்வாயாக" என்று கூறியரு ளினர். அன்று முதலாக உலகிலுள்ள அன்பர்களனை வரும் நம்பியாரூரரைத் "தம்பிரான் தோழர்" என்று பாராட்டுவாராயினர். சுந்தரமூர்த்திநாயனர், அத் திரு

மணக்கோலத்தைப் புனைந்தவராய், வன்மீக நாதரைத் தினந்தோறும் திருக்கோயிலுக்குச் சென்று தரிசனஞ் செய்து வருவாராயினர்.

இதற்கு முன்னே, திருக்கைலாசகிரியில் இருந்த பார்வதி தேவியாருடைய சேடியர்கள் இருவருள் ஒருவராகிய கமலினி என்பவர் அந்தத் திருவாரூரிலே உருத்திர கணிகையர் குலத்திலே பிறந்து, பரவையார் என்னும் பெயரைப் பெற்று, மங்கைப் பருவம் அடைந்திருந்தார். அவரும் தினந்தோறும் பாங்கிமாரோடு திருக்கோயிலுக்குப்போய்ச் சுவாமி தரிசனம் பண்ணிவருவார்.

அந்தப் பரவையார் ஒருநாள் சுவாமிதரிசனம் பண்ணப்போம்போது, அந்த நேரத்திற் சுவாமிதரிசனம் பண்ணும் பொருட்டுப் பரிசனங்களோடு சென்ற சுந்தரமூர்த்திநாயனார், திருவருள் கூட்ட, அந்தப் பரவையாரைக் கண்டு ஆசைகொண்டு நின்றார். பரவையாரும் சுந்தரமூர்த்திநாயனாரைக் கண்டு ஆசைகொண்டு, பின் சுவாமி தரிசனம் பண்ணவேண்டும் என்னும் விருப்பமானது தம்மை அவ்வாசையினின்றும் நீங்கித் தன் வசமாக்கிக்கொண்டு திருக்கோயிலின் உள்ளே செலுத்த, சென்றார். சுந்தரமூர்த்திநாயனார் அதுகண்டு, "என் மனசைக் கவர்ந்து சென்ற அதிசௌந்தரியமுள்ள இந்தப் பெண் யார்!" என்று வினவ, அங்கு நின்றவர்கள் "இவர் உருத்திர கணிகையரில் ஒருவர்; இவர் பெயர் பரவையார்" என்றார்கள். அதைக்கேட்ட சுந்தரமூர்த்திநாயனார் திருக்கோயிலினுள்ளேபோனார்; அதற்கு முன் பரவையார் பிரதக்ஷணஞ்செய்து சுவாமியை நமஸ்காரம் பண்ணித் துதித்துக் கொண்டு சந்நிதியினின்றும் புறப்பட்டார்; சுந்தரமூர்த்திநாயனார் சுவாமி சந்நிதா

னத்திற் சென்று, பரவையார்மேல் வைத்த பேராசை யால் அவரைச் சேரவேண்டிச் சுவாமியினது திருவடி களை வணங்கிக் கொண்டு புறப்பட்டு, தேவாசிரயன் என்னும் பெயரை யுடைய ஆயிரக்கால் மண்டபத்தை யடைந்து, "வன்மீகநாதர் பரவையாரை எனக்குத் தந் தருளுவார்", என்று நினைத்துக்கொண்டு, அங்கு இருக்க, பொழுதுபட்டது.

முன்னே சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு புறப் பட்ட பரவையார் சுந்தரமூர்த்தி யிடத்தில் தனியே சென்ற தமது மனசை ஒருவகையாக வலிந்து தம் வசப்படுத்தி அதிக மயக்கத்தோடு தமது மாளிகையை யடைந்து, பூவணையில் இருந்து, தம் மருகிருந்த பாங் கியை நோக்கி, "நாம் சுவாமிதரிசனஞ் செய்யப் போன போது வழியில் எதிராகவந்தவர் யாவர்?" என்றுகேட்க, அவள் "பிரம விஷ்ணுக்களும் தேடியறியாத சமானதீத ராகிய கடவுளே வலியவந்து ஆட்கொள்ளப்பெற்ற ஆதி சைவராகிய சுந்தரமூர்த்திநாயனார்" என்றாள். அதுகேட்ட பரவையார் "நமது ஆண்டவருக்கு உரிய அடியவரோ" என்றுசொல்லிச் சுந்தரமூர்த்திநாயனார் மேல் முன்வைத்த ஆசை மேன் மேலும் வளர, சய னத்தின்மேல் விழுந்து புலம்பினார்.

அப்பொழுது கடவுளானவர், பரவையாரைச் சுந்தர மூர்த்திநாயனாருக்கு விவாகஞ் செய்து கொடுக்கும்படி அடியார்களுக்குக் கட்டளையிட்டு, சுந்தரமூர்த்தி நாயனா ரிடத்திற் சென்று, "உனக்குப் பரவையை விவாகஞ் செய்து தரும்படி நம்முடைய அடியார்களுக்கு ஆஞ்ஞா பித்தோம்" என்று அருளிச் செய்து, பரவையாரிடத் திலும் போய், "உனக்கும் சுந்தரனுக்கும் விவாகம்

நடக்கும்" என்று சொல்லியருளினார். மற்றநாள் உதய காலத்திலே சிவபத்தர்கள் எல்லாரும் கூடிவந்து, சுந்தர மூர்த்திநாயனாருக்குப் பரவையாரை விதிப்படி விவாகஞ் செய்து கொடுத்தார்கள்.

சுந்தரமூர்த்திநாயனார் இங்ஙனம் பரவையாரோடு வாழும்போது ஒருநாள் திருக்கோயிலிற் சென்று தேவா சிரய மண்டபத்திலே சிவனடியார்கள் கூடியிருப்பதைக் கண்டு அவர்கண்மீது பக்தி கூர்ந்து "இவ் வடியார்க ளுக்குத் தமியேன் அடிமையாகும் நாள் எந்நாளோ" என்று சிந்தித்துக்கொண்டு சுவாமி தரிசனஞ் செய்யும் வண்ணம் திருக்கோயிலுட் புக்கனர். அப்பொழுது வேண்டுவார் வேண்டுவன ஈந்தருளும் வீதிவிடங்கப் பெருமானார் அவருக்குக் காட்சி கொடுத்தருளி "அப் பனே! நீ எம்முடைய அடியார்களை வணங்கி அவர்கள் மேற் பதிகம் பாடுக" என்று அருளிச்செய்ய, நாயனார் மீளவும் பெருமானை வணங்கி நின்று "சுவாமீ! அடி யார்களுடைய வரலாறு இன்னது என்றும், அவர்கள் தன்மை இப்படிப்பட்டதென்றும் அறியாத தமியேன் எப்படிப் பாடுவேன்? அவர்களைக் குறித்துப் பாடுஞ் சத்தியைச் சர்வஞ்ஞத்துவம் உடைய தேவரீரே அடி யேனுக்கு அருளிச்செய்ய வேண்டும்" என்று பிரார்த் தித்தார். சுவாமி அதற் கிசைந்து, அடியார்களுடைய வழித்தொண்டு அவருக்குத் தெரியும்படி செய்து, உலகத் தார் உய்யும் வண்ணம் வேதாகமங்களை அருளிச்செய்த தமது திருவாக்கினாலே "தில்லைவாழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று அடியெடுத்துக் கொடுத்து மறைந் தருளினார். உடனே சுந்தரமூர்த்திநாயனார் தேவாசிரய மண்டபத்தை யடைந்து அடியார் திருக்கூட்டத்தை வணங்கி அவ்வடியா ரெல்லார்க்கும் வெவ்வேறாக "அடி

யேன், அடியேன்'' என்று திருத்தொண்டத் தொகை யென்னுந் திருப்பதிகத்தைப் பாடி அவ் வடியார்களைப் பணிந்தார்.

நம்பியாரூரர் திருவாரூரிலே பரவையார் மாளிகையில் இருக்குங் காலத்திலே, குண்டையூர்க்கிழாரென்னும் வேளாண்குலத்து அன்பரொருவர் அரிசி நெல் முதலிய பொருள்களைக் கொண்டுவந்து நாயனார்க்குக் கொடுத்துத் தொண்டுசெய்து வருவார். இங்ஙனமாகச் சிலகாலம் மழையில்லாமையால் வளஞ் சுருங்கியபோது, குண்டையூர்க்கிழார் தாம் சுந்தரமூர்த்திநாயனாருக்குச் செய்துவந்த தொண்டு முட்டுப்படுமே எனக் கவலை கொண்டு இறைவனைப் பிரார்த்தித்தார் அதுகண்டு சிவபெருமான் குண்டையூர்க்கிழாருக்கு நெற்குவையை யுதவி யருளினர். அந்நெற்குவை மனிதரால் எடுக்கப்படும் அளவிற்கு மேற்பட்டுவிட, குண்டையூர்க்கிழார் அவ் விஷயத்தைச் சுந்தரமூர்த்திநாயனாருக்கு விண்ணப்பஞ் செய்தார் நாயனார் அவருடன் கூடிக்கொண்டு குண்டையூர்க்குச் சென்று அங்கே முகில்மண்டலம் வரை அளாவிநின்ற நென்மலையைக்கண்டு அதிசயங் கொண்டு பெருமான் திருவருளைப் பாராட்டிச் சமீபத்திலுள்ள திருக்கோளிலி என்னுந் தலத்தில் எழுந்தருளிய பெருமானார் சந்நிதியை யடைந்து, வணங்கி "நீளநினைந் தடியேன்'' என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார்

அப்பொழுது சிவபிரானுடைய திருவருளினால் "இன்றிரவு நென்மலையைப் பூதங்கள் பரவைவீடு மாத்திரமன்றித் திருவாரூர் முழுதும் நிறையும்படி கொண்டுவந்து சேர்க்கும்'' என ஆகாயத்திலே ஓர் அசரீரி வாக்குப் பிறந்தது. சுந்தரமூர்த்திநாயனார் உவகை யடைந்தா

ராய்ப் பெருமானாருடைய திருவருளைச் சிந்தித்துப் போற்றி, திருவாரூருக்கு மீண்டு திருக்கோயிலிற் சென்று வன்மீகநாதரை வணங்கிப் பரவையார் திருமனைக்கு மீண்டார். அன்றிரவு சிவாஞ்ஞைப்படி சில பூதங்கள் குண்டையூரிலிருந்த நெற்குவையை எடுத்துக்கொண்டு போய்ப் பரவையார் மாளிகையை நிறைவித்து, அத் திருவாரூர் முழுவதிலும் நெற்குவைகளாக்கின விடிதலும், அவ்வூர்ச் சனங்களெல்லாரும் தத்தம் வீட்டின் எல்லையைச் சேர்ந்த நெற்குவைகளை எடுத்துக்கொள்ளலாமென்று நாயனார் பறையறைவித்தார்.

இங்ஙனஞ் சிலநாட்சென்றபின், திருநாட்டியத்தான் குடியில் வாழும் கோட்புலிநாயனார் சுந்தரமூர்த்தி நாயனாரை யடைந்து வணங்கித் தமது ஊருக்கு எழுந்தருளும்வண்ணம் வேண்ட, நாயனார் அதற்கு உடன்பட்டார். சுந்தரமூர்த்தி நாயனார் அங்கெழுந்தருளியபோது, கோட்புலிநாயனார் எதிர்கொண் டழைத்து உபசரித்துப் பூசித்துத் திருவமுது செய்வித்தபின், சிங்கடியார், வனப்பகையார் என்னும் தமது புதல்விய ரிருவரையும் கொண்டுவந்து நாயனார் முன்னிலையில் விடுத்து, அப் புதல்விய ரிருவரையும் அடிமையாகக் கொண்டருள வேண்டும் என்று பிரார்த்திக்க, "பெண்கள் இருவரும் எமக்குப் புதல்வியர்" என்று அவர்களைத் தம் அபிமான புத்திரிகளாகக் கொண்டார். நாயனார் அங்குள்ள திருக்கோயிலுக் கெழுந்தருளிப் பரமசிவனை வணங்கி, "பூணாண தோரரவம்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடினார். அந்தப் பதிகத்தின் திருக்கடைக்காப்பிலே கோட்புலி நாயனாரைச் சிறப்பித்து, சிங்கடியாருக்குப் பிதாவாகத் தம்மை நினைத்தபடியால் தம்மைச் "சிங்கடியப்பன்" என்று வைத்தருளினார்.

பின்னர் நாயனார் அவ்விடத்தைவிட் டகன்று திருவலிவலத்திற்குச் சென்று பெருமானை வணங்கி, "வலிவலந் தன்னில்வந்து கண்டேனே" என்னும் பதிகம் பாடி மீண்டு திருவாரூரை யடைந்து ஆரூர்ப் பெருமானாரை வணங்கித் துதித்துக்கொண்டு பரவையார் திருமனையி லிருந்தார். இருக்கும்பொழுது, பங்குனி உத்தரத் திருநாள் சமீபித்தலும், பரவையார் திருவிழாச் செலவிற்குக் கொடுப்பதற்குப் பொன் கொண்டுவரும்பொருட்டு, திருப்புகலூரை யடைந்து கோயிலுட் சென்று, சுவாமியை வணங்கித் திருப்பதிகம் பாடி, சமீபத்தில் இருக்கின்ற திருமடத்துக்குப் போகத் திருவுளங்கொண்டு புறப்பட்டுச் சென்று, கோயிலின் திருமுன்றிலின் ஒரு பக்கத்திலே அடியார்களோடும் இருந்தருளினார். அப்பொழுது சிவபிரானது திருவருளினாலே நித்திரை வந்தது; உடனே அங்கே திருப்பணிக்காகச் சுடப்பட்ட செங்கற்கள் பலவற்றை வருவித்து உயரம்பண்ணி, அதனையே தலையணையாகக் கொண்டு, உத்தரீயத்தை விரித்து நித்திரை செய்தார். பின் விழித்தெழுந்தபோது அந்தச் செங்கற்கள் எல்லாம் பொற் கல்லாய் இருக்கக் கண்டு, திருவருளைத் துதித்து, திருக்கோயிலினுள்ளே போய்த் "தம்மையே புகழ்ந் திச்சை பேசினும்" என்னுந் திருப்பதிகம் பாடிப் பொற் குவையையுங் கொண்டு அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, திருப்பனையூருக்குப் புறத்தே போனார். அப்பொழுது சிவபெருமான் திருக்கூத்தோடுங் காட்சிகொடுத்தருள, சுந்தரமூர்த்திநாயனார் எதிர்சென்று வணங்கி, "மாடமாளிகை" என்னும் பதிகம் எடுத்து "அரங்கிலாட வல்லா ரவரே யழகியரே" என்று பாடி, திருவாரூரை அடைந்து, பரவையார் வீட்டில் எழுந்தருளியிருந்தார்.

பின்னர் அவ்விடத்தைவிட் டகன்று, திருநன்னிலம், திருவீழிமிழலை, திருவாஞ்சியம், திருநறையூர், அரிசிற்கரைப்புத்தூர், திருவாவடுதுறை, திருவிடைமருதூர், நாகேச்சுரம், சிவபுரம், கலயநல்லூர், கும்பகோணம், திருவலஞ்சுழி, திருநல்லூர், திருச்சோற்றுத்துறை, கண்டியூர், ஐயாறு, பூந்துருத்தி என்னுந் தலங்களுக்கு யாத்திரை செய்து, திருவாலம்பொழிலை அடைந்து சுவாமிதரிசனம்முடித்து, அன்றிரவு நித்திரை செய்தார். சுவாமி அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி "மழபாடிக்கு வருவதற்கு மறந்தாயோ" என்று சொல்லியருளினர். சுந்தரமூர்த்தி நாயனர் விழித்தெழுந்து, காவிரி நதியைக் கடந்து, அதன் வடபாகத்திற் சேர்ந்து, திருமழபாடிக்குப்போய், சுவாமிதரிசனஞ் செய்து, "பொன்னர் மேனியனே" என்னுந் திருப்பதிகம் பாடி, சிலநாள் அங்கிருந்து காவிரிநதியின் இரு பக்கத்திலுமுள்ள ஸ்தங்களை வணங்கி, மேற்குத் திக்குக்கு யாத்திரை செய்ய நினைந்து, திருவானைக்காவுக்குப் போய், சிவபெருமானை வணங்கி, "மறைகளாயின நான்கும்" என்னுந் திருப்பதிகம் பாடினர். உறையூர்ச் சோழமகாராஜா பதக்கஞ்சாத்திக்கொண்டு காவிரியிலே ஸ்நானஞ் செய்தலும், அது வாழவிப்போக அவர், சிவபெருமானே கொண்டருளும் என்று பிரார்த்திக்க, அது திருமஞ்சனக் குடத்துள்ளே புக, அபிஷேகஞ் செய்யப்படும்பொழுது அதனைச் சிவபெருமான் அணிந்து அவருக்கு அருள்புரிந்த தன்மையைச் சுந்தரமூர்த்திநாயனர் அத் திருப்பதிகத்திலே சிறப்பித்தருளினர்.

பின்னர்த் திருப்பாச்சி லாச்சிரமத்தை யடைந்து, "வைத்தனன் றனக்கே தலையுமெ னுடம்பும்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடி, பொற்குவை பெற்றுச் சிலநாள்

அத்தலத்திலே தங்கியிருந்து திருப்பைஞ்ஞீலி, திருவீங் கோய்மலை என்னுந் தலங்களை வணங்கிக்கொண்டு சுந்தர மூர்த்திநாயனர் கொங்கநாட்டை அடைந்தார். அங்கே காவிரிக்குத் தென்கரையி லிருக்கும் திருப்பாண்டிக் கொடுமுடி என்னுந் தலத்திற்குச் சென்று "மற்றுப் பற் றெனக் கின்றி" என்னும் நமச்சிவாயப் பதிகத்தைப் பாடித் திருப்பேரூரை யடைந்து, அங்கெழுந்தருளிய பெருமான் பொன்னம்பலத்தில் தாம் நடனஞ் செய்யும் திருக்கோலத்தைக் காட்ட, அற்புதத்தோடு வணங்கிக் கொண்டு சிதம்பரத்திற்கு மீண்டு செல்லச் சித்தங் கொண்டார். செல்லும் மார்க்கத்தில், திருவெஞ்சமாக் கூடல், திருக்கற்குடிமலை, திருவாறைமேற்றளி, இன் னம்பர், புறம்பயம் என்னுந் தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருக்கூடலையாற்றூரைச் சமீபித்தும், அதற் குச் செல்லாமல் திருமுதுகுன்றை நோக்கிச் சென்றார்.

செல்லும் வழியிலே, பரமசிவன் ஒரு பிராமணராகி, சுந்தரமூர்த்திநாயனருக்கு முன் நின்றார். நின்ற அந்தப் பிராமணரைச் சுந்தரமூர்த்தி நாயனர் பார்த்து "ஐயரே, திருமுதுகுன்றுக்குப் போகும் வழி எது? சொல்லும்" என்று கேட்க, ஐயர் "இது கூடலையாற்றூருக்குப் போகும் வழி" என்று சொல்லி வழி காட்டிக்கொண்டு முன்னே சென்றார். சுந்தரமூர்த்தி நாயனர் அவரைத் தொடர்ந்து சென்று, பின் அவரைக் காணுதவராய், "வடிவுடை மழு வேந்தி" என்றெடுத்து "அடிகளிவ் வழி போந்த அதிசய மறியேனே" என்னுந் திருப்பதிகத் தைப் பாடிக் கூடலையாற்றூரை யடைந்து, சுவாமி தரிசனஞ்செய்துகொண்டு திருமுதுகுன்றுக்குப் போனர். அத் திருமுதுகுன்றநாதர் பன்னீராயிரம் பொன்

கொடுத்தருள, அவர் அதை மணிமுத்தாநதியி லிட்டுத் திருவாரூர்க் குளத்தில் எடுத்துப் பரவையார்க்குக் கொடுத்தனர்.

பின்னர் நள்ளாறு முதலிய தலங்களை யெல்லாம் தரிசித்துத் திருக்குருகா வூருக்குச் செல்லுங் காலத்து, மகாதேவன்கொடுத்த பொதிசோற்றை யுண்டு "இத்தனை யாமாற்ற மறிந்திலேன்" என்னுந் திருப்பதிகம் பாடி, நடுவிலுள்ள பல தலங்களைத் தரிசித்துத் திருநாவலூரை யடைந்து சிலநாள் அங்கிருந்தனர். பின் தொண்டை நாட்டில் உள்ள தலங்களைத் தரிசிக்க விரும்பித் திருக் கழுக்குன்றத்தைத் தரிசித்துத் திருக்கச்சூருக்குச் சென்று அங்கு இறைவன் பிச்சையெடுத்துக் கொடுத்த அன்னத்தையுண்டு, "முதுவாயோரி கதற" என்னுந் திருப் பதிகத்தைப் பாடிக் காஞ்சீபுரம், திருவோணகாந்தன் தளி, திருக்காளத்தி முதலாகிய தலங்களைத் தரிசித்து ஒற்றியூர் வந்து சேர்ந்தார்.

அக்காலத்து அநிந்திதையார் என்பவர் ஞாயிறு என்னும் ஊரிலிருக்கும் வேளாளரிற் சிறந்தோங்கிய ஞாயிறு கிழவர் என்பவருக்குப் புதல்வியாகப் பிறந்து, சங்கிலியார் என்னும் பெயர்பெற்று மணப்பருவத்தை யடைந்து, ஒருவரையும் மணக்க எண்ணாது, தந்தை யார் உத்தரவினைப் பெற்றுத் திருவொற்றியூரை யடைந்து கன்னிமாடத்து இருந்து, இறைவன் திரு வருளை முன்னிட்டுப் பூமாலை முதலியவைகளை இறைவ னுக்குத் தொடுத்துக் கொடுத்து விரதங் காத்திருந்தார். இவர் இவ்வித மிருக்குநாளில் அங்குச் சென்ற நம்பியா ரூரர் திருக்கோயிலுட் புகுந்தபோது, சங்கிலியாரைக் கண்டு ஆசைகொண்டு அவரைத் தமக்கு மனைவியாக் கும்படி பெருமானை வேண்டலும், இறைவரும் சங்கிலி

யாருக்குத் தெரிவித்து, அவரைப் பிரியாதிருக்கும் வண்ணம் மகிழடியின்கீழ்ச் சத்தியப்பண்ணிக் கொடுக்கும்படி செய்து, அடியவர்களால் மணத்தை நிறைவேறச் செய்தனர்.

இவ்விதம் சிலகாலம் சங்கிலியாரும் நம்பியாரூரரும் வாழ்ந்து வரும்போது, திருவாரூரர் வசந்த உற்சவத்தை எண்ணி "பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன்" என்னும் பதிகத்தைப் பாடி ஒற்றியூரை விட்டு நீங்கி, சத்தியம் தவறினமையாற் கண்ணிழந்து திருமுல்லை வாயிலை வணங்கித் திருவெண்பாக்கத்தை அடைந்து "திருக்கோயிலுள்ளீரே" என்று பாடுதலும், "உளோம் போகீர்" என்றருளி இறையவர் அவருக்கு ஊன்றுகோல் கொடுத்தனர். பின்னர்ப் பல தலங்களைத் தரிசித்துக் காஞ்சிபுரத்துக்குச் சென்று கடவுளைப் பிரார்த்தித்து இடக்கண் பெற்றனர்.

பின்னரும் பல தலங்களை வணங்கித் திருவாரூரிற் பெருமானைப் பாடுங்காலத்து வலக்கண்ணையும் பெற்றனர்; இவர் சங்கிலியாரை மணந்ததைக் கேள்வியுற்ற பரவையார் இவரோடிருக்க மறுத்தலும், இறையவரே தூதுசென்று இருவருக்கும் உற்ற ஊடலைத் தவிர்த்தனர், பின்னர் இருவரும் வாழ்ந்திருந்த காலத்து ஏயர்கோன் கலிக்காமநாயனார் என்பவர் நம்பியாரூரர் இறைவனைத் தூது அனுப்பியது தகுதி அற்றது என்று கோபம் கொண்டிருத்தலை அறிந்து, இறைவன் அவ்விருவரையும் ஒற்றுமைப்படுத்தத் திருவுளங்கொண்டு அக் கலிக்காம நாயனாருக்குச் சூலைநோய் உண்டாகச் செய்து, அதை நம்பியாரூரரால் தீர்க்க எண்ணி, நம்பியாரூரரை அங்கே போம்படி ஏவுதலும், அதுகேட்ட கலிக்காமநாயனார் உடைவாளால் தம் வயிற்றைக்

கிழித்துக்கொண்டு இறந்தனர்; அதுகண்ட நம்பியாரூர ரும் "நானும் உயிர் துறப்பேன்" என்று உடைவாளை எடுத்தனர். பின்னர் இறைவனுடைய திருவருளாற் கலிக்காமர் விழித்து எழுந்தவர்போல் உடனே எழுந்து நம்பியாரூரர் கையைப் பிடித்துக்கொண்டனர். அவ்விருவரும் அப்போது நட்பினராயினர்.

பின்னர்ச் சேர மண்டலத்திலுள்ள சேரமான் பெருமாள்நாயனார் நம்பியாரூரருக்கு நட்பினரான தால், சேரமான் தோழர் என்று நம்பியாரூரருக்குப் பெயர் ஆயிற்று. இவ்வாறு பல தலங்களை நம்பியாரூரரும் சேரமான் பெருமாள் நாயனாரும் தரிசித்தபிறகு, நம்பியா ரூரர் சேரனாட்டிற்குச் சென்று அங்குச் சிலகாலம் வசித்துப் பின்னர் ஆரூரை நினைந்து அவ்வூரை வந் தடைந்தனர். சிலநாட் சென்றபிறகு, கொங்குநாட்டை அடைந்து திருப்புக்கொளியூரிற் சென்று, அங்கே ஒரு வீதியில் இரண்டு வீடுகளில் ஒன்றில் மங்கல ஒலியும் மற்றதில் அழுகை ஒலியும் கேட்டு, அழுகை ஒலிக்குக் காரணமாகிய முதலை விழுங்கிய பிள்ளையை வரவழைத் துக் கொடுத்தும், பின்னர்ச் சேரமானிடத்துச் சென்று, அச்சேரமான் பெருமாள்நாயனார் வணங்கி உபசரிக்க அம் மலைநாட்டிலுள்ள சிவஸ்தலங்கள் பலவற்றுக்கும் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு மகோதை நகரத்தையடைந்தார்.

இப்படிப் பலநாட் சென்றபின் ஒருநாள் சேரமான் பெருமாணயனார் ஸ்நானம் பண்ணும்பொழுது, சுந்தர மூர்த்தி நாயனார் திருவஞ்சைக் களத்துக்கு எழுந்தருளி உள்ளே புகுந்து, சந்நிதானத்திலே விழுந்து நமஸ் கரித்து எழுந்து நின்று, அக்கினியிற் பட்ட மெழுகு

போல மனங் கசிந்துருக, இரண்டு கண்ணினின்றும் ஆநந்தவருவி சொரிய, உரோமஞ் சிலிர்ப்ப, இரண்டு கைகளும் சிரசின்மேல் ஏறிக்குவிய, "அடியேனை இப் பிரபஞ்ச வாழ்க்கையினின்றும் நீக்கித் தேவரீருடைய திருவடியிலே சேர்த்தருளல் வேண்டும்" என்னுங் குறிப்போடு "தலைக்குத் தலைமாலை" என்னுந் திருப்பதிகம் பாடினார். அப்பொழுது கைலாசகிரியிலே சிவபெருமான், விட்டுணு பிரமன் முதலிய தேவர்களை நோக்கி "நீங்கள் போய் நம்முடைய தோழனாகிய சுந்தரனை வெள்ளை யானையின்மேலேற்றிக்கொண்டு வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்தருளினார்.

அதைக்கேட்ட தேவர்கள் சுவாமியை நமஸ்கரித்து அநுமதி பெற்று, வெள்ளை யானையையுங் கொண்டு, திருவஞ்சைக் களத்தையடைந்து, திருக்கோயிலை வலஞ் செய்து, திருவாயிலிலே போய், உள்ளே நின்று எழுந் தருளிவந்த சுந்தரமூர்த்தி நாயனாரை எதிர்கொண்டு, சிவபெருமானுடைய ஆஞ்ஞையைத் தெரிவித்தார்கள்; அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் சுவாமியை நினைந்து நமஸ்கரித்து எழுந்து தேவர்களுக்கு எதிரே போனார். தேவர்கள் அவரைப் பிரதக்ஷிணஞ் செய்து வெள்ளை யானையின்மேலேற்ற, அவர் பஞ்ச வாத்தியங்கள் ஒலிக்கவும், தேவர்கள் தோத்திரஞ் செய்து பூமாரி பொழியவும், தம்முடைய தோழராகிய சேரமான் பெருமாணாயனாரைத் திருவுளத்திலே நினைத்துக்கொண்டு சென்றார்.

சேரமான் பெருமாணாயனார் சுந்தரமூர்த்தி நாயனாருடைய செயலை அறிந்து, அந்த க்ஷணமே அருகில் நின்ற ஓர் குதிரையின்மேலேறிக்கொண்டு, திருவஞ்சைக் களத்துக்குப் போய், வெள்ளை யானையின்மே

லேறி ஆகாயத்திற் செல்லும் சுந்தரமூர்த்தி நாயனுரைக் கண்டு, தாம் ஏறிய குதிரையின் செவியிலே ஸ்ரீபஞ்சாக்கரத்தை ஓதியருளினுர் உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்திலே பாய்ந்து, சுந்தரமூர்த்தி நாயனுருடைய வெள்ளை யானையை அடைந்து அதனை வலஞ்செய்து, அதற்கு முன்னுகச் சென்றது. சேரமான்பெருமா ணுயனுருடைய படை வீரர்கள் குதிரையிற் செல்லும் அந் நாயனுரைத் தங்கள் கண்ணுக்குப் புலப்படு மெல்லைவரையும் ஆகாயத்திலே கண்டு, பின் காணுமையால், மிகுந்த திடபத்தியினுலே உருவிய உடைவாட்களினுல் தங்கள் தங்கள் தேகத்தைச் சேதித்து வீர யாக்கையைப் பெற்றுப்போய் சேரமான் பெருமாணுயனுருக்கு முற்பட்டு. அவரைச் சேவித்துக்கொண்டு சென்றுர்கள். சேரமான் பெருமாணுயனுர் முன்செல்லப் பின்சென்ற சுந்தரமூர்த்தி நாயனுர் "தானெனை முன் படைத்தான்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடிக்கொண்டு திருக்கைலாசமலையின் தெற்குவாயிலுக்குமுன் போனுர்.

போனவுடனே இருவரும் யானையினின்றும் குதிரையினின்றும் முறையே இறங்கிப் பல வாயில் கனையுங் கடந்து, திருவணுக்கன்றிருவாயிலை அடைந்தார்கள். அங்கே சேரமான் பெருமாணுயனுர் தடைப்பட்டு நிற்க, சுந்தரமூர்த்திநாயனுர் உள்ளே போய், சுவாமி சந்நிதானத்திலே விழுந்து வணங்கியெழுந்து ஸ்தோத்திரஞ் செய்துகொண்டு நின்றுர்; சுவாமி அவரை நோக்கி, "சுந்தரா வந்தாயோ" என்று திருவாய்மலர்ந்தருளினுர். அதைக் கேட்ட சுந்தரமூர்த்தி நாயனுர், "சுவாமீ, அடியேன்செய்த பிழையைப் பொறுத்து அடியேனைப் பந்தத்தினின்றும் நீக்கி, அடியேனுக்குத் திருவடி தந்தருளிய

பெருங்கருணை அடியேன் றரத்ததோ" என்று சொல்லிப் பலமுறை நமஸ்காரஞ் செய்து, சிவானந்த வெள்ளத்தில் அமிழ்ந்தி நின்றார்.

பின்னர், "சுவாமீ! தேவரீருடைய திருவடிகளை அடையும்பொருட்டுச் சேரமான் பெருமாள் திருவணுக்கன் றிருவாயிலின் புறத்திலே வந்து நிற்கின்றார்" என்று சுந்தரர் விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் அவரை உள்ளே அழைப்பித்து, "நீயும் ஆலாலசுந்தரனும் நமது கணங்களெல்லாவற்றிற்குந் தலைவராயிருங்கள்" என்று அருளிச்செய்தார்; இருவருந் திருக்கைலாசபதியை நமஸ்கரித்து எழுந்து, அவருடைய திருவருளைத் தலைமேற்கொண்டு, சுந்தரமூர்த்தி நாயனார் ஆலாலசுந்தராகி, முன்னே தாஞ்செய்த திருத்தொண்டைச் செய்பவரும், சேரமான்பெருமாணயனார் கணநாதராகி அவர் செய்யுந் தொழிலைச் செய்பவருமாயினார்கள்.

முன்னே பூமியில் அவதரித்த பரவையாரும் சங்கிலியாரும், முறையே கமலினியாரும் அநிந்திதையாருமாகிப் பார்வதி தேவியாருக்குத் தாங்கள் முன்செய்த திருத்தொண்டைச் செய்து வந்தார்கள். சுந்தரமூர்த்தி நாயனார் தாம் வழியிலே அருளிச்செய்த திருப்பதிகத்தைத் தக்ஷிண பூமியிலே ஏற்றும்பொருட்டுச் சமுத்திர ராஜனாகிய வருணனிடத்திலே கொடுத்தருள, அவன் அதைத் திருவஞ்சைக் களத்திலே உய்த்துத் தெரிவித்தான்.

———

# மாணிக்கவாசகசுவாமிகள் வரலாறு

பெருந்துறையிற் சிவபெருமா னருளுதலும்
பெருங்கருணைப் பெற்றி நோக்கிக்
கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத்
துரியநிலை கடந்து போந்து
திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல்
வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்
திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ
ரடிகளடி யிணைகள் போற்றி.

## மந்திரியானமை

செந்தமிழ் வழங்கும் நிலமாகிய பாண்டிநாட்டின் கண்ணே சகல செல்வங்களும் மலிந்த திருவாதவூர் என்னும் ஓர் ஊர் உண்டு. அந்த ஊரிலே ஆமாத்தியப் பிராமணர் குலத்திலே சம்புபாதாசிரயர் என்னும் நாமத்தினை யுடையவர் ஒருவர் இருந்தார். அவர் கல்வி யறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவர். கடவுட் பக்தி யுடையவர். அவருடைய மனைவியார் பெயர் சிவஞான வதியார். அவ் வம்மையாரிடத்தில் ஒரு சற்புத்திரர் அவதாரஞ் செய்தார். அக் குழந்தைக்குத் திருவாத வூரர் என்று பெரியோர் பெயரிட்டனர். அன்னப்பிரா சனம், சௌளகன்மம், வித்தியாரம்பம், உபநயனம் முதலிய கருமங்கள் அவ்வக் காலத்தில் விதிப்படி அப் பிள்ளைக்குச் செய்யப்பட்டன. பதினாறும் வயசில் திரு வாதவூரர் சகல கலைகளிலும் வல்லுநராயினர்.

அக் காலத்திலே பாண்டிநாட்டை அரசுசெய்த அரி மர்த்தனபாண்டியன் திருவாதவூரருடைய கல்வி யறி

வொழுக்கங்களைப் பெரியோர் சொல்லக் கேள்வியுற்று, அவரைத் தன்னிடம் அழைத்துத் தனக்கு முதன்மந்திரி யாக நியமனஞ் செய்தான். அவர் பாண்டியராசனுக்குத் துணையாக விருந்து நீதி திறம்பாது பரிபாலனஞ் செய்து வந்தார்.

இங்ஙனமாக, திருவாதவூரர் மனத்திலே பதி பசு பாசம் என்னும் இவைகளைப்பற்றிய விசாரம் உண்டானது. இச்சையே பிறவிக்குக் காரணம் என்றும், இப் பிறவித் துன்பத்தை யொழித்தற்குச் சிவபிரானுடைய திருவருள் வேண்டுமென்றுந் துணிந்து திருவாதவூரர் பரமசிவனைப் பத்தியோடு வழிபடுவாராயினர். அவர் பிரபஞ்ச வாழ்க்கையிற் பயனில்லையெனக் கண்டார்; உண்மை ஞானத்தைத் தருவதாகிய நான்காஞ் சத்திநிபாதமென்னும் அதிதீவிர பக்குவ நிலையை அவர் அடைந்தார். விளாமரத்தி லிருக்குங் குரங்கிற்குக் கல்லா லெறிய, குரங்கு மரத்திலிருந்த விளாங்கனியைப் பிடுங்கி யெறிய, அக்கனியை விரும்பியவர் பெற்றுச் செல்வதுபோல், சற்குருவை அடைதல் வேண்டுமென்னும் எண்ணங்கொண்டு, திருவாதவூரர் கற்றவர்களுடன் தர்க்கஞ்செய்து வருவாராயினர்.

இஃதிங்ஙனமாக, ஒருநாள் அரிமர்த்தனபாண்டியன் தனது அத்தாணி மண்டபத்தின்கண்ணே கொலுவீற்றிருக்கும்போது, அவனுடைய தூதுவர்கள் சிலர் வந்து அவனை வணங்கி "மகாராசாவே, ஆரிய தேசத்து வணிகர் சோழநாட்டின் கடற்கரையிற் சிறந்த குதிரைகள் கொண்டுவந்திருத்தலை நாங்கள் நேரிற் கண்டோம்" என்று சொன்னார்கள். பாண்டிய ராசன் தூதர் சொன்ன வார்த்தையைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்து

தனது முதன்மந்திரியாகிய வாதவூரரை நோக்கி, "நான் தரும் பணத்தைக்கொண்டு, நீர் சோழநாட்டிற்குச் சென்று சிறந்த குதிரைகளை வாங்கிவாரும்" என்று சொன்னான். பாண்டியன் கொடுத்த நாற்பத்தொன்பது கோடி பொன்னையும் பெற்றுக்கொண்டு திருவாதவூரர் நால்வகைச் சேனை சூழச் சகல வரிசைகளோடும் ஒரு சுப தினத்திற் புறப்பட்டு, ஆலவாயின்கண்ணே கோயில் கொண்டருளிய சோமசுந்தரக் கடவுளை வணங்கிக் கொண்டு மதுரைப்பதியைக் கடந்து சென்றார்.

## திருப்பெருந்துறையில் உபதேசம் பெற்றமை

புறப்பட்டு மதுராபுரியை நீங்கிச் சோழதேசத்துக் குப் போகும்போது, இவரை ஆட்கொள்ளத் திருவுளங் கொண்ட பரமசிவனார், கைலாசகிரியிலுள்ள தமது அடியார்களையும் கணநாதர்களையும் நோக்கி, "நீங்கள் மானுடரூபங்கொண்டு எம்மோடு வாருங்கள்" என்று அவர்களை யழைத்துக்கொண்டு, முத்தியைத் தருகின்ற ஆசாரிய மூர்த்தங்கொண்டு நெடிய கைலாயமலையை நீங்கித் திருப்பெருந்துறையில் வந்துசேர்ந்து அவ்விடத்தி லுள்ள ஓர் சோலையின் நடுவே ஒரு குருந்தமரத்தின்கீழே எழுந்தருளித் திருவாதவூரருடைய பாசம் நீங்குகின்ற காலத்தை நோக்கிக்கொண்டிருந்தார்.

இப்படி யிருக்க, திருவாதவூரரும் அந்த வழியா கவே வந்து திருப்பெருந்துறைக்குச் சமீபத்திற் சேர்ந் தார். அவ்விடத்திற் குருமூர்த்தமாய்ப் பரமசிவன் எழுந்தருளி யிருக்கும் சோலையில் அடியார்கள் படிக் கின்ற சிவாகமங்களின் ஒலியைக் கேட்டு "இது என்ன ஒலி என்று அறிந்து வந்து சொல்லுங்கள்" எனத் தூதர்களை நோக்கிச் சொல்ல, அவர்கள் போய்ப் பார்த்து

வந்து, பல அடியார்கள் தம்மைச் சூழ்ந்திருக்கப் பரம சிவனுக் கொப்பான ஒரு பெரியவர் அங்குள்ள ஒரு குருந்தமர நீழலில் வீற்றிருக்கின்றார் என்று சொன்னார்கள்; திருவாதவூரர் மனமகிழ்ந்து அந்தப் பெரியாரைக் காணவேண்டுமென்ற ஆவலோடு அச் சோலையிற் போய், மேன்மையாகிய பரமசிவனது தெய்வசபையைக் கண்டு மனத்தால் வணங்கிக் காயத்தால் வணங்காதவர்போல நின்று அந்த ஆசாரிய மூர்த்தியின் திருமேனி பொன்போல விளங்குவதைக் கண்டு மன மகிழ்ந்து அவரை நோக்கி, "ஐயா! உமது திருக்கரத்தில் இருக்கின்ற புத்தகத்தின் பெயர் என்ன" என்று கேட்க, அந்தப் பெரியவர் "இந்தப் புத்தகத்தின் பெயர் சிவஞான போதம்" என்று அருளிச்செய்தார்.

அதைக்கேட்ட திருவாதவூரர் "சிவமாவது யாது? ஞானமாவது யாது? போதமாவது யாது? இவற்றை விவரித்துச் சொல்லுவீரானால், அந்நாளிற் கல்லாலநீழலின்கண் எழுந்தருளியிருந்தவர் நீரேயாவீர், அடியேனும் உமக்கு அடிமையாவேன்" என்று சொல்ல, பரமசிவன் "சிவம் என்பது ஒப்பற்ற மெய்ப்பொருள், ஞானமென்பது அதனை அறிதல். போதமென்பது அறிந்ததைத் தெளிதல்" என்று திருவாதவூரருடைய மன முருகும்படி அருளிச்செய்தார். அருளிச்செய்தலும், திருவாதவூரர் மனமகிழ்ந்து பொன்னம்பலத்திலே திருநடனம் செய்கின்ற பரமசிவனானவர் என்னை யாளும் பொருட்டுக் குருவடிவம் கொண்டு இங்கு எழுந்தருளினாரென்று நினைந்து அவரை நோக்கி, "நிலையில்லாத பொருள்களெல்லாவற்றையும் யான் விரும்பேன்; உம்முடைய திருவடியை யடைந்து என் பிறவித் துன்பத்தை நீக்கிக்கொள்ள விரும்புகின்றேன்; என்னை இப்

பொழுதே உமக்கு அடிமையாக்கிக் கொள்ளவேண்டும்'' என்று வணங்கி நின்றார்.

அப்படி நின்ற இவரது அதிதீவிர பக்குவத்தை யறிந்த பரமசிவனடியார்களில் ஒருவர் எழுந்து, இவருடைய வினைகளை நீக்கிக் காத்தருளவேண்டும் என்று வணங்கி நின்றார். அவ்வடியாருடைய வேண்டுகோளுக்குக் கருணைக்கடலாகிய பரமசிவனானவர் இசைந்து, திருவாதவூரரை நோக்கி, ''உன்னை அடிமைக்கொள்ளும் பொருட்டு இந்தத் திருப்பெருந்துறைக்கு யாம் வந்தோம், நீ இரங்கவேண்டாம்'' என்று திருவாய்மலர்ந்தருளி, அவ்வடியார்களிற் பெரியவராகிய ஒருவரை நோக்கி 'இந்தத் திருவாதவூரனை இன்று நாம் அடிமை கொள்ளல் வேண்டும்; ஆகையால் இதற்கு வேண்டிய திரவியங்களை நீ விரைவில் ஆயத்தப்படுத்தல் வேண்டும்'' என்று நியமித்தருளினார். அந்த அடியாரும் அப்படியே அச்சோலையில் ஒரு அழகிய கோயிலையும் வேண்டிய உபகரணங்களையும் அமைத்தார். பிறகு சூரியன் அஸ்தமித்துப் பதினைந்து நாழிகைக்குமேல், திருவாதவூரருக்கு மாயாமலம் நீங்கும்சமயம் வந்துதோன்ற, ஆசாரியமூர்த்தி நீராடி ஒப்பற்ற சிவந்த பட்டுப் பரிவட்டத்தை உடுத்து, அந்தக் கோவிலினுட்சென்று தெறகுமுகமாக ஆசனத்தின்மேல் எழுந்தருளி யிருந்த பின்பு, திருவாதவூரரும் நீராடி வெள்ளையுடை தரித்து ஆசாரியருடைய சந்நிதியில் மகிழ்ச்சியோடு வந்து, அவரது திருவடிக்கு அபிஷேகஞ்செய்து மலர்களாலருச்சித்துச் சந்தனம் பூசிச் செங்கழுநீர் மாலையைச் சூட்டி ஆசைதீர நோக்கித் திருவமுது படைத்து, அவர் அமுது செய்தபின் வெற்றிலை பாக்கு, தூபதீபம் முதலிய உபசாரங்களும் செய்து பட்டுக்குடை பிடித்து

ஆலவட்டம் அசைத்து மலர்களை இரண்டு கரங்களி லும் ஏந்திக்கொண்டு நின்றார்.

அப்பொழுது பரமசிவனானவர் அவர்மீது அன்பு வைத்துக் கிருபாநோக்கஞ்செய்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுணர்த்த விரும்பிச் சிவத்தை முன்னாகமாறி இவரது காதில் திருவாய்மலர்ந்தருளினார். அப்பொழுது திருவாத வூரருடைய பிறவித் துன்பமானது பரமசிவனது பார்வையினாலே, விளக்கின் முன்னே யிருள்கெடுவது போலக் கெட்டொழிந்தது. உடனே ஆசாரியமூர்த்தி யைத் தோத்திரஞ்செய்து வணங்கி நிலத்தில் வீழ்ந்தார். ஆசாரியரும் இவரது சிரசின்மீது தமது திருவடியைச் சூட்டினார். அந்தத் திருவடியைத் திருவாதவூரர் தமது இரண்டு கண்களிலும் ஒற்றிக்கொண்டு மார்போ டணைத்து மெய்ப்பரிவோடும் எழுந்துநின்றார். அப் பொழுது தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள்; அந்த இரவு நீங்கி விடியற்காலம் வருதலும், காலைக் கடன்கள் கழித்து ஆசாரியமூர்த்தியானவர் திருவாத வூரரைத் தனியே யழைத்துப்போய், சிவாகமங்களின் அருமையாகிய பொருள்களை யெல்லாம் நன்றாக விளங்கும்படி அருளிச்செய்து "இப்பொழுது யாம் கொண்டுவந்த இந்த வுருவத்தை உன் மனத்திலிருத்தி வைப்பாய்" யென்றும் "இதுவேபொரு" ளென்றும் அருளிச் செய்தார்.

இந்த உபதேசமொழிகளைக் கேட்ட திருவாதவூரர் மனமகிழ்ந்து பலமுறை ஆசாரியமூர்த்தியைத் துதித்து, குதிரை கொள்ளக் கொண்டுவந்த பொருள் முழுதும் ஆசாரியருக் கெதிரேவைத்து வணங்குதலும், ஆசாரி யரும் முகமலர்ந்தெழுந்தருளி யிருந்தார்; பின்பு அவ்

வடியார்களிற் சிறந்த ஒருவரைப் பார்த்து "இந்தப் பொருளை யெல்லாம், சிவாலயத்திருப்பணிக்கும், தவஞ் செய்வோர்க்கும், வறியவர்க்கும் கொடு" என்றருளிச் செய்ய, அவரும் அப்படியே செய்தார். திருவாதவூரரும் சீவன்முத்தரானார். அன்றியும் சேனைகள் சூழ்ந்துவர அரசரைப்போல வந்த வாதவூரர் உருவந் தெரியாமற் பூசப்பட்ட திருநீற்றையும் கோவண உடையையும் குடுமி விரித்திருக்கின்ற சிரசையும் ஆநந்தபாஷ்பம் பொழிகின்ற கண்களையும் உடையவரானார். இப்படியான பின்பு, தமக்கு அநுக்கிரகம் செய்த பரமாசாரியரை அன்புடன் பார்த்து நிற்பார்; ஆநந்தக் கண்ணீரொழுக அழுவார், கை கூப்பித் தொழுவார்; கீழேவிழுந்து நமஸ்கரிப்பார், எழுந்திருப்பார், புறங் காட்டாமல் நடப்பார், மீண்டுவருவார், பகலும் இரவும் அறியமாட்டார், சிவஞானத்தையே பொருளாகக் கொண்டு, கண்டோர்கள் அஞ்சும்படியான பித்தர் பாலர் பிசாசர்களுடைய கோட்பாட்டை யுடையவரானார்.

இப்படி யிருக்க, இவரது படைத் தலைவர்களும், சுற்றத்தாரும் ஆகிய எல்லாரும் எதிரே வந்துநின்று, அவரைத் தொழுது, பாண்டிய ராஜன் கோபங்கொள்ளாதபடி குதிரைகளை வாங்கிக்கொண்டு போகவேண்டுமென்பதைத் தெரியாதிருப்பது பழுதென்றிரங்கி, "ஐயரே, நீர் வரவேண்டும்" என்று அழைத்தபோது, அவர்களை நோக்கி, "நீங்கள் யார்? இந்த வார்த்தைகளெல்லாம் என்னோடு சொல்லவேண்டாம், நீங்கள் உடனே போய்விடுங்கள்" என்று சொன்னார். அவர் இப்படிச் சொல்வது என்னவென்று சேனாபதிகள் எல்லாரும் இரங்கி நின்று, அவரை விட்டு நீங்கிப்

பாண்டிய ராஜனிடத்திற்போய், நடந்த செய்தியைச் சொல்லி வணங்கி நின்றார்கள்.

இந்தச் செய்தியைக் கேட்ட பாண்டியராஜன், "இப்படிப்பட்ட மந்திரிகளையுடைய அரசர்களுக்கு என்ன குறை" என்று கோபத்தோடு சிரித்து வன் சொற்கள் நிரம்பிய ஒரு ஓலையெழுதி அவர்கள் கையிற் கொடுத்து, "இந்த ஓலையைக் கொண்டுபோய் அவருக்குக் காட்டி, அவரை உடனே இட்டுக்கொண்டு வாருங்கள்" என்று செலுத்த, அவர்களும் அவர் இருக்குந் திருப்பெருந் துறைக்குப் போய் அவரைக் கண்டு திருமுகத்தைக் காட்ட, அவர் "பரமசிவன் திருமுகமல்லாமல் மற்றொரு திருமுகத்தையும் பார்க்க மாட்டேன், அதைப் படித்து அதில் எழுதப்பட்டிருக்கிற செய்தியைச் சொல்லுங்கள்" என்று சொல்ல அந்தத் தூதர்களில் ஒருவன் அப்படியே படித்துச் சொல்லக்கேட்ட திருவாதவூரர், "யமன் எழுதியனுப்பும் ஓலையைக் கண்டும் அஞ்சாத சிவனடியார், ஒரு அரசன் எழுதும் ஓலையைக் கண்டஞ்சுவாரோ" என்று சொல்லி ஆசாரியர் சந்நிதிக்குப் போய், ஓலையில் அரசன் எழுதி விடுத்த செய்தியைச் சொல்லினார்.

கேட்ட பரமசிவனானவர், "நீ, அஞ்சவேண்டியதில்லை; நாமே குதிரைகளைக் கொண்டுவந்து பாண்டியனுக்குக் கொடுப்போம்; நீ தூதுவர்களோடு போய்ப் பாண்டியனைக் கண்டு, நீ எழுதின ஓலையைப் பார்த்தவுடனே நான் வந்துவிட்டேன்; ஆவணிமாதம் மூல நாளிற் குதிரைகள் வருமெனச் சொல்வாயாக" என்று சொல்லி, அவருடைய நெற்றியில் திருநீறு தரித்து, முன் வந்ததுபோல, ஆடையாபரணாதிகளால் அலங்

கரித்து மந்திரிக் கோலஞ்செய்து, ஒரு உயர்ந்த மாணிக் கத்தைக் கொடுத்து, "இதைக் கொண்டுபோய்ப் பாண் டியனுக்குக் கொடுத்துக் காண்பாய்" என்று சொல்லி யருள, விடை பெற்றுப் போன திருவாதவூரர், மதுரா புரியைச் சேர்ந்து பாண்டியனிடத்துப் போய்த் தமது பரமாசாரியர் கொடுத்த மாணிக்கத்தைக் கையுறையாக வைத்து அவனைக் கண்டார்.

பாண்டியன் அவரை மகிழ்ந்து நோக்கி, இரு மென்று சொல்லி ஆசனங் கொடுக்க, இருந்தார்; பின்பு பாண்டியன் அந்த மாணிக்கத்தை வியந்து பலதரம் உற்றுப்பார்த்து "நீர் போன இடத்தில் நடந்த செய் தியைச் சொல்லும்" என்று கேட்க திருவாதவூரர் பாண்டியராசனைப் பார்த்து, "நீர் கொடுத்த திரவியத் தைக் கொண்டுபோய் நல்ல இலக்கணங்க ளமைந்த குதிரைகளை வாங்கி, அவைகளை மதுராபுரிக்குக் கொண்டுவருவதற்குத் தகுந்த நல்லநாள் விசாரித்த போது, வேதியர் ஆராய்ந்துபார்த்து, ஆவணி மாதம் மூல நக்ஷத்திரம் நல்ல நாளென்று சொல்ல, அந்த நாளைக் குறித்துக்கொண்டு திருப்பெருந் துறையிலிருந்தேன்; உம்முடைய சேனைகளும் உறவினரும் இங்கு வரவிரும் பித் திரும்பிவந்து, என்மீது சில அபவாதங்களைச் சொல்லக்கேட்டு, நீர் கோபங்கொண்டு ஒரு ஓலையெழுதி யனுப்பினீர். அதைக்கண்டு நான் முந்தியே வந்துவிட் டேன்; குதிரைகள் நான் சொன்னபடியே ஆவணி மூலநாளில் வரும்" என்று சொன்னார்.

அதைக் கேட்ட பாண்டியன், திருவாதவூரரை நோக்கி, "நமக்குள்ள சிநேகத்தைக் கெடுக்கவேண்டு மென்னும் எண்ணமுடையவர் சிலர் சொல்லக்கேட்டுக்

கோபங்கொண்டெழுதினேம். அதை மனத்திற் கொள்ளாமல், பழையபடியே இரும்" என்று உரிமையுண்டாகப் பேசி, அரமனைக்கு அழைத்துப்போய்த் தன் பக்கத்திலிருத்தி உயர்ந்த ஆடை ஆபரணாதிகளைக் கொடுத்து இராஜகாரியங்களெல்லாஞ் சொல்லி வீட்டுக்குப் போமென்று அனுப்பினான். அப்படியே திருவாதவூரரும் போய்த் தமது திருமாளிகையிலிருக்க, குதிரைகள் வரவேண்டிய தினத்துக்கு இரண்டு நாளைக்கு முன்னே பாண்டியன் தனித்திருக்கும்போது ஒரு மந்திரி அரசனிடம் வந்து, "அரசே, குதிரை வாங்கும்படி நீர் கொடுத்த பொருளையெல்லாம், அவர் திருப்பெருந்துறையில் ஒரு சிவனடியார் கையிற் கொடுத்து விட்டார்; குதிரைகள் வாங்கவேயில்லை. அவர் சொன்னவையெல்லாம் பொய் வார்த்தைகள்" என்றான். அதைக்கேட்ட பாண்டியன், சில தூதர்களைப் பார்த்து, நீங்கள் திருப்பெருந்துறைக்குப் போய், அங்கே குதிரைகள் இருக்கின்றனவாவென்று பார்த்து வாருங்களென்று கட்டளையிட்டான்; அவர்களும் அப்படியே போய்ப் பார்த்துத் திரும்பி வந்து "திருப்பெருந்துறையிலும் அதையடுத்த வூர்களிலும் தேடிப்பார்த்தோம்; குதிரைகள் இல்லை" என்று சொன்னார்கள். அது கேட்ட பாண்டியன் பெருங் கோபங்கொண்டு, திருவாதவூரரை வருத்திப் பொருள் வாங்கும்படி தண்டற்காரருக்குக் கட்டளையிட்டான். அப்படியே தண்டற்காரர்கள் திருவாதவூரரைப் பலவகையாய் வருத்தியும் கடுஞ் சொற்கள் பேசியும் அவர் பேசாதிருக்க, அவரைச் சிறைச் சாலையில் வைத்தார்கள். உடனே சூரியன் அஸ்தமித்தான்.

அடிகளுக்கு நேரிட்ட துன்பத்தைக் குறித்து அந்த மதுரைமா நகரிலுள்ளோரெல்லாரும் அன்றிரா முழு

துங் கண்ணுறங்கிலர். பின்பு பொழுது விடிந்தது, சூரியனும் உதயமானுன். பாண்டிய ராஜனும் எழுந்து விதிப்படி காலைக்கடன் கழித்து, ஆடையாபரணுதிகள் அணிந்து தனது அரமனை முகப்பிலே வந்து வீற்றிருந் தான். தண்டலாளர்கள் திருவாதவூரரைச் சிறைச் சாலையிலிருந்து வெளியிற் கொண்டுவந்து பொருளைக் கொடுக்கச் சொல்லி வெயிலில் நிறுத்தி வருத்திஞர் கள். அப்பொழுது திருவாதவூரர், பரமாசாரியரை நினைந்து, "ஐயரே! ஆவணி மூலத்திற் குதிரை கொண்டு வருவோமென்று தேவரீர் சொன்னது பொய்யோ? பிரபஞ்ச வாழ்வை வெறுத்து, உம்மையடைந்த என்னை மீளவும் இந்தத் துன்பத்துக்காளாக்கினது தகுதியோ! உம்மிடத்தில் அன்பிலேனென்று என்னை வெறுத்து விட்டால், இங்கே எனக்கு வேறு உதவியுண்டோ!' சிவனடியாெனுருவனை வெயிலில் நிறுத்திஞர்களென்று பலரும் பேசிக்கொண்டால் உமக்குப் பெருமை யாகுமோ! அடியேன் படுந் துன்பத்தைக் கண்டால், யார்தாம் உமக்கு அடிமைப்படுவார்கள்! உமது அன் பர் சொல் உம் திருச்செவிக்கு ஏறுமேயன்றி, அன் பிலேஞகிய என் சொல் தேவரீருடைய திருச்செவிக்கு ஏறுமோ!" என்று பலவாறு சொல்லியிரந்தார்; அன்ப ருடைய சொற்களையெல்லாம் பரம தயாநிதியாகிய சிவபெருமானுனவர் தமது திருச்செவியிலேற்று, திரு வாதவூரருடைய துன்பத்தை நீக்கத் திருவுளங் கொண் டருளினுர்.

## குதிரையிட்டமை

பரமசிவனுனவர் திருவாதவூரருக்கு நேரிட்ட துன் பத்தை நீக்கிக் காத்தருள வேண்டுமென்று திருவுளங் கொண்டு, நரிகளெல்லாம் பரிகளாகவும், தேவர்கள்

அப்பரிகளைச் செலுத்துகின்ற பாகர்களாகவும் தமது திருவுளத்தில் நினைத்தார். நினைத்தமாத்திரத்தில் அப்படியேயாக, தாமும் ஆரியதேசத்துக் குதிரை வர்த்தகர் போலத் தமது உருமாறி வேதமாகிய வெண்பரிமீ தேறிக்கொண்டு, குதிரைச் சேவகர் தம்மைச் சூழ்ந்து வர, மதுரைமாநகரத்தின் நெடியவாயிலிற் குதிரைகளைக் கொண்டுவந்தார்.

அவ்விடத்தில் நின்றவர்கள் குதிரை வந்த செய்தியைப் பாண்டியராஜனுக்கு அறிவித்தார்கள். கேட்ட அரசன் மகிழ்ச்சியடைந்து, திருவாதவூரரிடத்தில் நேசம் வைத்து அவரை வரவழைத்து அவருக்கு ஆடையாபரணாதிகளை வெகுமதி செய்து, குதிரைகளைப் பார்ப்போம் வாருமென்று அவரோடு அரமனையை விட்டு வெளியே வந்து சிவிகைமேலேறிக்கொண்டு, வையாளி வீதிக்குச் சென்று, முத்துப் பந்தலின்கீழ், பொன்னினாற் செய்யப்பட்ட சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்து திருவாதவூரருடைய மனங் களிக்கவும், தனது சந்திர வமிசம் விளங்கவும், திருநீறும் ஸ்ரீபஞ்சாக்ஷரமும் எந்நாளும் நிலைபெற்று விளங்கவும், சங்கு முதலிய வாத்தியங்கள் சத்திக்க, பூமியிலிருந்து மேலெழுகின்ற துகள் ஆகாயத்திற் பரவ, பெரிய கடலானது பரவி வருவது போல நெருங்கி வருகின்ற குதிரைகளின் தோற்றத்தைக் கண்டான். குதிரைச் சேவகர் நடுவே பரமசிவனுனவர் ஆரிய தேசத்தார்க்கு அரசன்போல வந்தார்.

பாண்டியன் குதிரைச் சேவகர்க்கிடையே வந்த பரமசிவனது திருக்கோலத்தையும், குதிரைச் சேவகருடைய பொலிவையும், குதிரைகளுடைய அலங்காரத்தையுங் கண்டு அதிசயித்து, மனமகிழ்ந்து திருவாத

ஊரரை நோக்கி "இந்த ஆரியகுலேசரை ஒரு வீதியிலே இக் குதிரைகளை நடத்தும்படி சொல்லும்" என்றான்; அப்படியே திருவாதவூரரும் போய்ப் பரமசிவனுகிய வணிகர்தலைவரிடத்தில் விண்ணப்பஞ் செய்ய, அவரும் அதற்கிசைந்து பாண்டியராஜன் நன்ருகப் பார்க்கும்படி, குதிரைகட்குரிய நாகபந்தம், விருத்தம், நெடுவீதி என்னும் நடையெல்லாம் இனிதாக நடத்திக் காட்டி, பிறகு நடனமிடும்படியும் நடத்திக்கொண்டு எதிரே வந்தார். பாண்டியராசன் குதிரைக்குத் தலைவனைப் பார்த்து அதிசயப்பட்டுத் தலையசைத்து, மதிக்கப்படாத விலை உயர்ந்த வஸ்திரமொன்றைப் பரிசாகக் கொடுத்தான். அதைக் குதிரைவணிகர் தலைவர் செண்டினுல் ஏற்றுக்கொண்டு புன்னகை செய்தார். அதை விரைந்து வந்து இரு கரங்களினுலும் ஏற்று வணங்கவில்லையென்றும், உடனே தன் சிரசிலே தரித்துக்கொள்ளவில்லையென்றும் பாண்டியன் கோபங்கொண்டான். இதையுணர்ந்த திருவாதவூரர் பாண்டியனுக்கருகிற் போய், எப்படிப்பட்ட அரசர்கள் கொடுத்தாலும், அந்த வஸ்திரங்களைச் சவுக்கினுல் ஏற்றுக்கொள்வது இவர்கள் தேச வழக்கம்" என்று சமாதானஞ் சொல்லி, அவன் மனத்திற் கொண்ட கோபத்தைத் தணித்தார்.

பாண்டியன் கோபந் தணிந்தபிறகு அசுவ இலக்கண நூலில் வல்லவரை நோக்கி "இந்தக் குதிரைகளின் இலக்கணங்களை யாராய்ந்து சொல்லுங்கள்" என்று கூற, அவர்களும் அவற்றின் இலக்கணங்களை யாராய்ந்து பார்த்து, அக்குதிரைகள் மிகவும் உயர்ந்தவைகளென்று சொன்னுர்கள். அசுவ லக்ஷணசாஸ்திரிகள் இப்படிச் சொன்னதன்பின்பு, பாண்டியன் அவற்றை விலைமதித்து, தான் கொடுத்தனுப்பின பொருளினும் எட்டுப்பங்

கதிகமான பொருள் விலைபெற்ற குதிரைகள் கிடைத்தமையால் மிகவும் மனமகிழ்ந்து, வணிகர்தலைவர் முகத்தைப் பார்த்து, "இந்தக் குதிரைகளையெல்லாம் கயிறு மாறித் தரவேண்டும்" என்று சொல்ல, அப்படியே குதிரைச்சாத்தர்களுக்குள்ளே தலைவராகிய ஒருவர் கயிறு மாறிக்கொடுக்க, பாண்டியனுடைய பரியாளர் குதிரைகளைக் கொண்டுபோய்ப் பந்தியிற் சேர்த்தார்கள். பரமசிவனுனவர் பாண்டியராஜனும் திருவாதவூரரும் காணும்படி தாம் வந்த திசை வழியாகப்போய்த் தங்கள் பழைய வடிவங்கொண்டு தேவர்கள் சூழ்ந்துவரத் தமது திருக்கோயிலுட் புகுந்தார். பின்பு பாண்டியன் திருவாதவூரரை நோக்கி, "இப்படிப்பட்ட உயர்ந்த குதிரைகள் உம்மாலேயே எனக்குக் கிடைத்தன" என்று உபசரித்து, அரமனைக்குப் போகவிடுத்துத் தானும் தன் அரமனையிற் புகுந்தான்.

அன்றிரவு நடுச்சாமத்திற் பரமசிவனது அருளினுல் அந்தக் குதிரைகளெல்லாம் நரிகளாகி, மதுரையிலுள்ளவர்களுடைய நித்திரையைக் குழப்பி ஒன்றோடொன்று சண்டையிட்டு, அந்தப் பந்தியில் நின்ற பழைய குதிரைகளைக் கடித்துக் கொன்று, ஊளையிடத் தொடங்கின. அதைக்கண்ட பரியாளர்கள் தங்கள் அரசனிடம்போய் முறையிட்டார்கள். கேட்ட பாண்டியன் அதிகங் கோபங் கொண்டான். உடனே பெருமான், நரிகளை மாயமாய்ப் போகும்படி செய்தார். அரசன் தன்னுடைய தண்டலாளரை நோக்கி, "முதன்மந்திரியாகிய திருவாதவூரரை அழைத்துவாருங்கள்" என்று சொல்ல, அவர்கள் அப்படியே செய்தனர்.

பாண்டியன் அங்கிருந்த மற்றை மந்திரிகளை நோக்கி, "இவர் இப்படிச் செய்யலாமோ?" என்று சினந்து

கூறித் தண்டலாளரை நோக்கி, "இவரைக் கொண்டு போய்ச் சுடுமணலோடு கூடிய நிலத்திற் கோடு கீறி உச்சி வெயிலில் நிறுத்தி, நாம் கொடுத்த திரவியம் முழுவதையும் வாங்குங்கள்" என்றான்; அப்படியே அவர்கள் அவரைக் கொண்டுபோய் வெயிலிலே நிறுத்தினார்கள். அப்பொழுது திருவாதவூரர் பரமசிவனை நினைந்து, "எம்பெருமானே! நான் என் செய்வேன்! தேவரீருக்குக் கிருபையில்லையோ! என்னை அடிமைக் கொண்டவர் தேவரீரல்லீரோ! என் துன்பத்தை அறிந்திலீரோ! என்னை இந்த வருத்தத்தினின்றும் நீக்கிக் காத்தருளவேண்டும்" என்று இரங்கினார்.

## மண்சுமந்தமை

இப்படித் திருவாதவூரர் இரங்கின நிலையைப் பரமபதியாகிய பரமசிவனானவர் கண்டு இரக்கங்கொண்டு, கங்கைநதியை நோக்கி, "நீபோய்த் திருவாதவூரனுடைய துன்பத்தை நீக்கக்கடவை" என்று சொல்லிவிடுக்க, அந்நதி பெருக்கெடுத்து, வைகை நதியோடு சேர்ந்து மிகவும் பெரிய கடல்போல எங்கும் புரண்டு பரவியது. பெரிதாகிய வைகைநதியின் பெருக்கு அந்த மதுரைமா நகரத்து மதிற்புறத்தே வந்து சூழ்ந்துகொண்டது. இச் செய்தியைப் பாண்டியன் கேட்டு விரைந்து சென்று பொன்னையும், பூவையும், முத்தினையும், வஸ்திரத்தையும், இரத்தினாபரணத்தையும் வைகை நதியிலிட்டு, "இந்த நாட்டிலுள்ள சீவராசிகளுக்கெல்லாம் உயிர்போன்ற தாயே! உன்னுடைய கோபம் தணியவேண்டும்" என்று வணங்கி நின்றான்.

அப்படி வேண்டியும் அந் நதியானது கோபந் தணியாமல் மேன்மேலும் அலைகளை வீசிக்கொண்டு

வருவதைக் கண்டு, இதன் வரலாற்றை யோசித்து அறிதல் வேண்டுமென்று தன்னளவிற் சற்றுநேரம் யோசித்துப் பின் தன் மந்திரிகளை நோக்கி, "நான் பெரியோர்களுடைய மனம் புழுங்கும்படியான தீமை செய்ததுண்டோ? நீங்கள் சொல்லுங்கள்" என்று கேட்டான்; அதைக்கேட்ட மந்திரிகள் ஆலோசித்து, "திருவாதவூரரைக் கோட்டில் நிறுத்தி வருத்துவதை நீக்கி, அவரை மனமகிழ்வித்தால், இந்தப் பெருக்கானது ஊரையடித்துக்கொண்டு போகாது" என்று சொல்லி வணங்கிநின்றார்கள். அதைக் கேட்ட பாண்டியன் மனமகிழ்ந்து அவர்களைக் கிருபையோடு நோக்கி "என் மனத்தில் நினைத்தபடியே நீங்களும் சொன்னீர்கள்" என்று கூறி, திருவாதவூரரை வரவழைத்துத் தன் முன்னேயிருத்தி உபசரித்து, "நீர் சிவனடியார்கையிற் கொடுத்தபொருள் நமதேயானால் அதனால் வரும் புண்ணியம் பிறரைச் சேருமோ, இதையறியாமல் நான் உம்மை வருத்தினது என் அறிவில்லாமையின் காரியமேயாகும்; இந்த வைகையாற்றுப் பெருக்கானது நமது நகரத்தை அழிக்காதபடி, தவத்திற் சிறந்த நீரே தடைசெய்ய வேண்டும்" என்று பிரார்த்தித்தான்; அதற்கு மனமிசைந்த திருவாதவூரர் பரமசிவனது திருவடியை நினைந்து, அவர் குதிரையேறி வந்த திருக்கோலத்தை மனத்திலமைத்து வணங்கின மாத்திரத்தில், வைகைநீரானது வேகங் குறைந்து அடங்கி உள்வாங்கிப்போகவே, திருவாதவூரர் அந்த நதிக்கரையில் வந்துநின்று அங்குள்ள ஏவலாட்களை நோக்கி 'இந்நகரிலுள்ளவர்களெல்லாரும் வந்து இந்த நதியின் அணைகட்ட வேண்டுமென்று நீங்கள் முரசறைவித்துப் பரப்புங்கள்" என்று நியமிக்க, அவர்

களும் அப்படியே முரசறைவித்து மதுரை நகரிலுள்ள மக்களனைவரும் நதிக்கரையில் வந்து சேரும்படி செய்தார்கள்.

அந்நகரத்துச் சனங்கள் அணைகோலுதற்குரிய கருவிகளாகிய மண்வெட்டி, கூடை முதலியவற்றை எடுத்துக்கொண்டுவந்து நதிக்கரையில் இடமில்லாமல் நிறைந்தார்கள். அப்போது திருவாதவூரர் நியமித்த காரியதரிசிகள் எவ்விடத்திலும் போய் ஒவ்வொருவருக்கும் இவ்வளவென்று அளவு கோலால் அளவுசெய்துவிட்டு அணைகோலுந் தொழிலை ஊக்கி நின்றார்கள். இப்படி அணைகட்டும்போது, பரமசிவன்மீது மிகவும் அன்புள்ளவளும், பிட்டுவிற்றுச் சீவனம் செய்பவளும், நரைமூதாட்டியுமாகிய செம்மனச் செல்வியென்பவள், தனக்கு அளவுசெய்து விடப்பட்ட பங்கை அடைக்கவகையறியாது நிற்க, அதிகாரிகள் அவளை நோக்கி, "நீ உன் பங்கை ஏன் அடைக்கவில்லை" என்று கடிந்துகூற, அம் முதியாள் "அடைப்பிக்கிறேன்" என்று சொல்லிவிட்டுச் சொக்கலிங்கப் பெருமான்சந்நிதியை யடைந்து "சுவாமீ, நான் கொடுக்கும் பிட்டைக் கூலியாக வாங்கிக் கொண்டு என் பங்கை அடைப்பவர் ஒருவருமில்லையே, நானென் செய்வேன்!' என்று இரந்துநின்றாள்; சொக்கலிங்கமூர்த்தி அவள்மீது இரக்கங்கொண்டு, ஒரு கூலியாள்போல வடிவங்கொண்டு, அவள் காணும்படி அவளுக்கெதிரே வந்துநின்று, "என்னை இப்போது கூலிவேலைக்கு ஏற்றுக்கொள்வாருமுண்டோ" என்று தெருவீதியிலே கூவ, செம்மனச்செல்வியானவள் மனமகிழ்ந்து அந்தக் கூலியாளிடத்திற் போய் நின்று, 'மகனே, நீ எனக்குக் கூலியாளாய் வரவேண்டும்" என்றாள்; கூலியாளானவர், "முற்கூலி தந்தால் வரு

வேன்" என்றுசொல்ல, அந்த அம்மை, "இப்போது வேண்டுமானால் உன் பசிதீரத் தின்பதற்கு அமிர்தம் போன்ற இந்தப் பிட்டைத் தருவேன்; பணம் வேண்டு மென்றால் அந்திக்காலம்வா; இப் பிட்டினை விற்றபின் பணமாகத் வருவேன்" என்றாள்.

அதைக்கேட்ட கூலியாளானவர் அதற் கிசைந்து அவள் கொடுத்த பிட்டைவாங்கி யுண்டு, "தாயே! பசிதீர்ந்தது, இனி உன் பங்கு முழுவதும் நானே யடைக்கின்றேன்" என்று சொல்லிப் பின்னும் கொஞ்சப் பிட்டினை வாங்கி யுண்டபடி, வைகைக் கரையில் வந்துநின்று, அம்மையை நோக்கி, "உன் பங்கைக் காட்டு" என்று சொல்ல, அவளும் அப்படியே காட்ட, கூலியாளானவர் அடைக்கத் தொடங்கினார். மண்ணைவெட்டுவார், கூடையிலே இடுவார், தம்மு டைய தலைமேலே சும்மாடு கோலிவைப்பார், நதிக் கரையிலே கொட்டித் திரும்புவார், வேர்ப்பார், உடம் பிளைத்தவர்போலப் பிட்டினை மென்று நாவினாற் சுவைப்பார், அந்த மூதாட்டிமேற் கிருபைநோக்கஞ் செய்வார், பிட்டு நன்றாயிருக்கிறதென்று தலையசைப் பார், பரமசிவனுக்குக் கண்ணப்ப நாயனார் படைத்த மாமிசத்தினும் இந்தப் பிட்டு மிகவும் உவப்பாயிருக்கிற தென்பார், மண்வெட்டியோடு கவித்த கூடையைக் கொண்டு கூத்தாடுவார், மண்ணை வெட்டிக் குவிப்பார், கோடுகீறி, விரைவிலே காலினாலே தாண்டித் திரும்புவார்.

இப்படி இவர் செய்வதைக்கண்ட மூதாட்டி பாண்டியன் காரியஸ்தர் கண்டால் என்னாகுமோவென்று பயந்தாள். அவள் நினைவையறிந்த கூலியாளர் அவளை நோக்கி, "தாயே, நீ கவலைப்படாமல் உன் வீட்டிற்குப்

போ, உன் பங்கை நான் விரைவில் அடைப்பேன்" என்று சொல்ல, அந்த அம்மையும் அப்படியே வீட்டுக் குப் போனாள். அப்போது அவள் பங்கைச் சொக்க நாதர் அடைக்கக்கண்ட வைகைநதியாகிய பெண், அலைகளாகிய கைகளால் அவரை வணங்கினாள். கூலி யாளாய் வந்த சொக்கநாதர் மண்ணெடுக்குங் கூடையே தலையணையாகவும், கொன்றைமர நிழலிலே நிறைந் துள்ள மணலே மெத்தையாகவுங் கொண்டு, வேலை செய்யும் முயற்சியாலே வருந்தித் திருமேனி யிளைத்தவர் போல நித்திரை செய்தார்.

அவர் நித்திரை செய்யும்போது, பேரின்பவாழ்வை யுடைய திருவாதவூரர், பிரம்பை வைத்துக்கொண்டு பக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து, "அவரவர்களுக்கு அளந்துகொடுத்த பங்கிலுள்ள குறை நிறைகளை அறிந்து வாருங்கள்" என்றார் அவர்களும் அப்படியே வைகை நதிக் கரையிற் போய் எல்லாரும் தத்தம் பங்கை நன்றாய் அடைத்திருப்பதைப் பார்த்து மனமகிழ்ந்து, வந்தியம்மையின் பங்குமாத்திரம் அடைக்கப்படாம லிருப்பதைக்கண்டு, "இது யாருடைய பங்கு" என்று அங்குநிற்பவர்களைக் கேட்க, அவர்கள் "மதுரைமா நகரத்திற் பிட்டுவிற்றுச் சீவனம் பண்ணுகின்றவளாகிய ஒரு கிழவி யிருக்கிறாள், இது அவள்பங்கு, அவள் ஒரு கூலியாளைக் கொண்டுவந்து விட்டாள், அவன் வேலையை விரைவாய்ச் செய்தலின்றிச் சிரித்தும் ஆடியும் பாடி யும் பொழுதுபோக்கினான், இப்பொழுது அந்தக் கொன்றைமர நீழலிற் படுத்துறங்குகிறான், அவனைப் பார்ப்பீராக" என்று காட்டினார்கள்.

அப்பொழுது அவர்களிற் பெரியவனாகிய ஒருவன் அவர்களை நோக்கி "அவனை இங்கே பிடித்துக்கொண்டு

வாருங்கள்" என்றான்; உடனே ஒருவன் ஓடிப்போனான். அப்போது பரமசிவனானவர் அஞ்சினார்போல் விழித்தார். ஏவலன் அவரைப்பார்த்து "எங்கள் எஜமானன் உன்னையழைத்து வரச்சொன்னான், வா" என்றான். கூலியாளர் பயந்தவர்போல் நிற்ப, அவரை அந்த ஏவலாளன் கையிற்பிடித்து இழுத்துக் கொண்டுபோய் எசமானன் முன்னிலையில் விட்டான்; அவன் அவரைக் கண்டு கோபங்கொண்டு, பக்கத்தில் நின்ற ஒரு பாவியைப் பார்த்து, "இவனை உதிரம் பெருக அடிப்பாயாக" என்று சொன்னான். அவன் பிரம்பைக் கையிலெடுத்தவுடனே, முனிவரும் தேவரும் கைகூப்பி வணங்கினார்கள். அவன் அடித்த அடியை உமாதேவியாரிருக்கின்ற இடதுபாகத்திலே பெருமான் ஏற்றலின்றி, அங்குள்ளாரெல்லாரும் திடுக்கிடும்படி மறைந்தருளினார்.

அந்த அடியானது பாண்டியன், அவன் பத்தினிமார், மந்திரிகள், சேனைகள், பூவுலகவாசிகள், தேவர், முனிவர் முதலாகிய எல்லார்மேலும் பட்டதோடுமன்றித் திருவாதவூரர்மேலும் பட்டது; அப்போது திருவாதவூரர், "நான் உய்யும்படி என்னையடிமை கொள்ளவந்த சோமசுந்தரக்கடவுள் ஒருவருக்குக் கூலியாளாகி எழுந்தருளினாரோ" என்று மிகவுங் கலங்கி நிற்கும்போது, தூதர்கள் ஓடிவந்து கடவுளுடைய திருவிளையாடலெல்லாம் அவருக்குச் சொன்னார்கள். அதைக் கேள்வியுற்ற திருவாதவூரர் மனந்தளர்ந்து, அவர் மண்சுமந்த இடத்தைக் காட்டுங்களென்று அவர்களோடுபோய் அந்த இடத்தில் வீழ்ந்து புரண்டு "ஆண்டவனே! அடியேனைக் கொடிய நரகத்தில் வீழாமே தடுத்தாட்கொண்டனையே! நீ யெவ்விடத்திலிருக்கின்றாய்" என்று புலம்பினார். வைகைநதியும் அறவே வடிந்தது.

பின்பு பாண்டியராஜனும் அவையெல்லாம் சிவன் செயலாமென்று தெரிந்து, திருவாதவூரரை வணங்கி, "தேவலோகத்திலிருந் திறங்கி, அருளையுடைய ஆமாத்தியர் குலத்திலே அவதரித்து, அடியேனுக்கு மந்திரியாகி, மனமகிழ்ச்சிதந்து, சோமசுந்தரக்கடவுள் குதிரையேறி வருவதை எனக்குக் காட்டி, எப்போதும் நீங்காத பாசமாகிய தளையறும்படி திருவுளம்பற்றினீர்; என் பிறவி யொழியத் திருமேனி கொண்டுவந்து அடியேனுக்குக் காட்டினீரென்று அறியாமல், எம்பெருமானுக்கு அழுக்கு வஸ்திரத்தைக் கொடுத்தேன், பாவியேன்! கங்கையைத் தரித்த சடைமுடியையுடைய கடவுளைக் குதிரையாளாக்கிய மெய்ப்பொருளென்றறியாமல், இப்பொருளை வேண்டி உம்மையும் வருத்தினேன். என் பிழைகளெல்லாவற்றையும் பொறுத்தருளவேண்டும்; நான் நாள்தோறும் உமது பணிசெய்ய, நீர் இவ்வுலகத்தையாளவேண்டும்" என்று வேண்டினான்; திருவாதவூரர் பாண்டியராஜனைப் பார்த்து "சிவபெருமான் எழுந்தருளிய திருப்பெருந்துறைக்குப் போகும்படி விடை கொடுக்க வேண்டும்" என்றார். அதுகேட்ட பாண்டியனும் 'அப்படியே செய்க" என்று விடைகொடுத்தான்.

பிறகு திருவாதவூரர் அரசன்பொருட்டுக் கொண்டிருந்த மந்திரி வேடத்தை நீக்கி மேன்மையாகிய தவவேடங்கொண்டு சொக்கநாதரை வணங்கி மதுரையை விட்டுப் புறப்பட்டு, கடவுள் தம்மை யாண்டருளின திருக்கோலத்தைக் கண்டு வணங்கவேண்டுமென்னும் விருப்பங்கொண்டு திருப்பெருந்துறைக்குப்போய் முனிவர்கள் சூழவிருந்த பரமாசாரியருடைய திருவடியின் மேல் வீழ்ந்து வணங்கித் துதித்தார். அப்படித் துதித்த திருவாதவூரரது சிரசின்மேற் பரமசிவனுனவர் தமது

திருக்கரத்தைவைத்து "எழுந்திரு" என்று சொல்ல, திருவாதவூரர் எழுந்து நின்றார். கடவுளானவர் அவருக்குத் திருநீறு சாத்திக் கிருபா நோக்கஞ் செய்ய, வாதவூரர் அன்புள்ள அடியார் கூட்டத்திற் சேர்ந்திருந்தார்; பரமாசாரியர் அந்த அடியார்களை நோக்கி "கைலாசத்தி லிருக்கிறவர்கள் நமது திருவுருவைத் தரிசிக்க விரும்பினார்கள். ஆதலால் அவ்விடத்திற்கு நாம் போகவேண்டும் நீங்கள் இவ்விடத்தில் இன்பத்தோடு வாழ்ந்து கொண்டிருங்கள்" என்று சொல்லக் கேட்ட அடியவர்கள் வந்து சூழ்ந்துகொண்டு வணங்கித் துதித்து, "எம்பெருமானே! இனி யாம் தேவரீரைத் தரிசிக்கிறது அருமை" என்று பூமிமேல் விழுந்து அழுதார்கள்; அப்படி அன்புகொண்டு அழுகின்ற அடியார்கள்மீது பரமசிவனானவர் அன்பு கூர்ந்து "நீங்கள் வருந்ுதலை ஒழியுங்கள், இந்தக் குருந்தமர நீழலிலே தெய்வ பீடமொன்று அமைத்து அதன்மேல் நம்முடைய திருவடிகளைச் செய்துவைத்து நாள்தோறும் வணங்கி யிருங்கள். அப்படி யிருக்கும் காலத்தில் ஒருநாள் இந்தப் பொய்கையிலே செழுமையாகிய நெருப்புண்டாகும். உண்டானவுடனே நீங்கள் எல்லீரும் தடாகத்தில் விழுந்து நம்மிடத்தில்வந்து உங்கள் கவலையை யொழிப்பீர்கள்" என்று சொல்லி, அந்த அன்பர்கள் சூழ்ந்து பின்னே வரக் கைலாயத்தை நோக்கிப் புறப்பட்டார்

புறப்பட்டவுடனே திருவாதவூரர் மாத்திரம் பரமசிவனைத் தொடர்ந்து போனார். அவர் தொடர்ந்து வருவதைக் கண்ட பரமசிவனானவர் கிருபை மிகுந்து அங்குள்ள ஒரு கொன்றைமர நீழலிலே வீற்றிருந்தார். திருவாதவூரர் அவ்விடத்திற் போய்க் கடவுளுடைய திருப்பாதத்தைத் தொழுதுநிற்க, பரமசிவனானவர் அவ

ரைப் பக்கத்திலிருத்தி, "நாம் எங்கே யிருந்தாலும் இந்தக் குருந்த மரநிழலிலே எல்லாரும் கண்டு வணங்கி உய்யும்பொருட்டு நித்தியவாசம் பண்ணுவோம், ஆகையால் இவ்விடத்தில் அடியார் கூட்டத்துடன் சேர்ந்திருந்து. இந்தப் பொய்கையி லுண்டாகின்ற நெருப்பில் அவர்கள் யாவரும் வீழும்பொழுது நீ மாத்திரம் வீழாமல், இவ்விடத்தை விட்டு, உத்தரகோசமங்கைக்குப் போய் அட்டமாசித்திகளையும் அடைந்து, தைவிகமாகிய இலிங்க வடிவா யிருக்கிற தலங்களில் இன்ன இன்ன தலங்களை வணங்கினால், அந்த அந்தத் தலங்களில் இந்த ஒளி யுருவையே உனக்கு நாம் காட்டுவோம்; பிறகு திருக்கழுக்குன்றம் என்னும் தலத்தை வணங்கி, இங்கே வந்து சிதம்பரத்துக்குப் போய்ப் புத்தரை வாதில் வென்ற பின்பு எமது சாயுச்சிய பதவியைப் பெறுவாயாக" என்றருளினார்.

## திருவம்பல தரிசனம்

அப்படிப் பரமசிவனானவர் சொல்லக் கேட்ட திருவாதவூரர் அவரை வணங்கி, "சுவாமீ, திருப்பெருந்துறையி லல்லாமற் சிதம்பரத்திற் பரமுத்தி கைகூடுமென்று தேவரீர் அருளிச் செய்தது என்ன" என்று கேட்க, பரமசிவன் "அன்பனே, புழுவானது தன்னை வேட்டைவாளியெடுத்த விடத்தன்றி, கொண்டுபோய் வைத்த விடத்திற்றான் குளவி வடிவங் கொள்ளும், அதுபோல, உன்னைக் கண்ட இந்தத் தலத்தில் உனக்கு உண்மையறிவை உபதேசித்தோம்; மேன்மை பொருந்திய சிவாநுபூதியாகிய மோக்ஷம் சிதம்பரத்தில் உண்டாகும்" என்று சொல்லித் திருவாதவூரருடைய நெற்றியில் விபூதி சாத்தி மறைந்தருளினார்; திருவாதவூரர்

அடியார் கூட்டத்தை யடைந்து அடியாருந் தாமும் குருந்தமர நீழலில் ஒரு பீடம் அமைத்து, அதன்மீது வேண்டுவார் வேண்டும் வரங்களைத் தருகின்ற திருவடிகளைப் பூசித்து வணங்கி யிருந்தார்.

அப்படி யிருக்கின்ற நாளிலே, கடவுளானவர் அன்பில்லாதவர்கள் தம்மைப் பாடினாலும் இரங்கி அவர்களுக் கருள் செய்வாரென்று தெளிந்து "நமச்சிவாய வாழ்க" என்று தொடங்கி இறைவருடைய திருவடியைப் புகழ்ந்து ஞானவாசகமாகிய திருவாசகத்தைப் பாடத்தொடங்கி, அற்புதப்பத்து, அதிசயப்பத்து, குழைத்தபத்து, சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப் பத்து, அடைக்கலப்பத்து, செத்திலாப்பத்து, புணர்ச்சிப்பத்து, அருட்பத்து என்னுமிவைகளை அருளிச்செய்த பிறகு திருவார்த்தை, எண்ணப்பதிகர், திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, உயிருணிப்பத்து, பிரார்த்தனைப் பத்து, திருப்பாண்டிப் பதிகம் என்பவற்றையும் அருளிச் செய்து, அடியார்களோடு கூடிச் சிலநாள் தங்கியிருந்த போது ஒருநாள், முன்னே பரமசிவனானவர் அநுக்கிரகித்தபடியே தடாகத்தில் அக்கினி யுண்டாகக் கண்டு, அடியார்க ளெல்லாம் பஞ்சாக்ஷரத்தைச் செபித்துக் கொண்டு அந்த அக்கினியில் மூழ்கினார்கள். மூழ்கின வுடனே பரமசிவனானவர் இடப வாகனத்தின்மீது உமாதேவியாரோடு எழுந்தருளித் தரிசனங் கொடுக்க, அடியா ரெல்லாரும் சிவகணநாதர்களாய் வடிவுகொண்டு இறைவருடன் கைலையை யடைந்தனர்.

அப்போது திருவாதவூரர் வேறாகப்போய் ஒரு கொன்றைமர நிழலிலே சிவயோகஞ் செய்திருந்தார். அப்படிச் சிவயோகஞ் செய்திருக்கிற காலத்தில்

அடியார்கள் அக்கினியிற் புகுந்தவிதம், கடவுள் இடப வாகனத்தின்மேல் எழுந்தருளினவிதம் முதலியவற்றை யும், இனித் தாம் கனகசபையிற் போய்ச் சேரும் விதத்தையும் சிவயோகத்தில் அறிந்துகொண்டு, "மெய்தானரும்பி" யென்றெடுத்துத் திருச்சதகம் பாடி, கடவுள் முன்னே தமக்கருளிச்செய்ததை நினைந்து அவ்விடத்தை விட்டுத் திருவுத்தரகோசமங்கை யென் னும் தலத்துக்குப்போய், கோயிலுள் தம்மை வந்தடிமை கொண்ட திருவுருவைக் காணுதவராய் மயங்கிக் கீழே விழுந்து பின் தெளிந்து நீத்தல்விண்ணப்பம் என்னும் பாடலைப்பாட, பரமசிவனுனவர் தமது பழைய வுருவைக் காட்டினர். அந்த வுருவைத் திருவாதவூரர் கண்டு வணங்கிச் சிலநாள் அங்கிருந்து, கடவுள் சொற் படியே போய்ப் பல தலங்களை வணங்கிச் சோழ நாட்டிற் சென்று திருவிடைமருதூரை யடைந்து வணங்கித் திருவாரூருக்குப் போய்த் தியாகராசருடைய திருவடித் தாமரைகளை வணங்கித் திருப்புலம்பல் என்னும் பாடலைச் சொல்லி வணங்கிப் பரமசிவன் அநுக்கிரகித்த தலங்களெல்லாம் தவருமல் வணங்கி, சீகாழியை யடைந்து கோயிலினுள்ளே சென்று இறைவரது திருவடியைப் பிடித்துக்கொண்டு, பிடித்த பத்து என்னும் பாடலை அருளிச்செய்து, சிலநாள் அங்கு வசித்து, அவ்விடத்தைவிட்டு நீங்கித் திருக்கழுக் குன்றத்துக்குப் போகவிரும்பித் தில்லை நகர்த்திசை நோக்கி வணங்கிப்போய், வடதிசையிலுள்ள விருத்தா சலத்தை வணங்கித் திருவருட்டுறை யென்று சொல்லப் படுகிற திருவெண்ணெய்நல்லூரை யடைந்து வணங்கி நீங்கித் திருவண்ணுமலையை அடைந்தார்.

அங்கே அன்று வந்து தம்மையாண் டருளின திருவுருவைக் கண்டு பலவாருகத் துதித்து அங்கே

யிருக்கிறநாளில், திருவெம்பாவை முதலிய திருவாசகங்களைப்பாடி, காஞ்சிமாநகரையடைந்து ஏகாம்பரரை வணங்கித் திருக்காமக்கோட்டத்தில் காமாக்ஷியம்மையின் திருவடியையும் வணங்கித் திருக்கழுக்குன்றத்துக்கு எழுந்தருளிக் கடவுளை வணங்கித் திருக்கழுக்குன்றப் பதிகம் பாடிச் சிலதினம் அங்கே வாசஞ்செய்து, பின் சிதம்பரத்துக்குப்போய்ச் சிற்சபையைக் கண்டு, நடராசமூர்த்தியை வணங்கிப் பாடி, அந்த நகர்ப்புறத்தில் ஒரு பன்னசாலை செய்து அதிலே தங்கியிருந்தார். அவரது செய்தி முழுவதையும் தில்லையிலுள்ளார் தங்களுக்குள்ளே புகழ்ந்துபேசி மனமகிழ்ந்து அதிசயித்தார்கள். இந்தப் பிரகாரம் சபாநாயகரது நிருத்தத்தைத் தமக்குள்ளே கண்டு தினந்தோறும் சென்று அந்தக் கடவுளைப் பத்தியோடு வணங்கித் தில்லைமாநகர்ப் புறத்திற் செய்த பன்னசாலையில் திருவாதவூரர் எழுந்தருளியிருந்தார்.

## புத்தரை வாதில் வென்றமை

அப்படியிருக்குங் காலத்திலே, பரமசிவனுடைய திருவடிகளை இடையருமல் நினைக்கின்ற ஒரு தபசியானவர், பூமியிலுள்ள எல்லாத் தேசங்களின் வளங்களையுங் காணவேண்டுமென்னும் விருப்பமுள்ளவராய்ச் சோழநாட்டையடைந்து தில்லைமாநகரை வணங்கி, ஈழதேசத்தைப் பார்க்கவேண்டுமென்று நினைத்து அங்கே போய் அந்த தேசத் தரசனிருக்கும் நகரைச் சேர்ந்து, தாம் செல்லுமிடமெல்லாம் 'பொன்னம்பலம் நீடூழி வாழ்க'' என்று சொல்லத் தொடங்கினர்: இப்படி இவர் சொல்லுவதைக் கேட்ட புத்தர்கள் அந்த நாட்டரசனிடத்திற் போய்ச் சொன்னர்கள். அரசன் அந்தத் தபசியை "இங்கேயழைத்து வாருங்

கள்" என்ருன். அப்படியே அவர்கள் போய் அழைக்க அந்தத் தபசியானவர் அவர்களோடு வந்து அரசனுக் கருகில் இருந்தார்.

அவர் இருக்கும்போது "பொன்னம்பலம் வாழ்க" என்று சொல்லக்கேட்ட அரசன் அவரைப் பார்த்து "நீர் பொன்னம்பலம் என்று சொல்லுந்தன்மை யென்ன" என்று வினவ, அந்தத் தபசியானவர் "சோழ நாட்டிலே சிதம்பரம் என்று ஒரு தலமுண்டு; அந்தத் தலம் முன்னே தில்லைவனம் என்னும் பெயரையுடைய தாயிருந்தது. அது திரிபுவனங்களுக்கு முன்னே யுண் டானதலமாம். அதனுல் அதை மூலஸ்தானம் என்று சொல்லலாம்; அந்தத் தலத்திலே சிற்சபையிற் பரம சிவனுனவர் உமாதேவியார் காண நடனஞ் செய்வார். ஒரு தரம் "பொன்னம்பலம்" என்று சொன்னுல் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை இருபத்தொராயிரத்தறுநூறுதரம் உச்சரித்ததற்கு நிகராகும், ஆதலால் அதனை யாம் உச் சரித்து வருகிறேம்" என்று சொன்னுர்.

அரசனுக் கருகிலிருந்த புத்த குருவானவன் கோபித்து, "பிடகாகமம் மூன்றையும் சொன்னதலைவ னல்லாமல் வேறெருதெய்வமுமுண்டோ? உண்டானுல், தில்லைநகருக்குப் போய், வாதுசெய்து, அக்கடவுள் நடனஞ்செய்கின்ற பாதத்தி லணிந்த வீரக்கழலையும் அவரது கொடியையும் அறுத்துப் போடுவேன். அவரது நடனசபையையும் புத்தன் கோயிலென்று சொல்லும்படி பண்ணுவேன்; இந்தக் காரியத்தை மூன்று தினங்களுள்ளே செய்து முடிக்கிறேன்" என்று சொல்லி, அநேக பௌத்தர் சூழச் சிதம்பரத் துக்குப் போனுன். புத்தராஜனும் தனது மகளாகிய

ஊமைப் பெண்ணுடன் சேனைகள் சூழச்சென்று தில்லைநகரைச் சேர்ந்தான். அந்த அரசன் போவதற்கு முன்னே போன புத்த குருவானவன் பரமசிவனது ஆலயத்திற் பொன்னினாற் செய்யப்பட்ட மண்டபத்தைச் சேர்ந்தான்.

அவனைப் புத்தராஜன் வணங்கியிருக்கும்போது, ஆலயத்திலிருந்தவர்களெல்லாம் ஒருங்கு சேர்ந்து மனம் நொந்து, "புத்தனே! நீ இப்பொழுது ஆலயத்தைவிட்டு ஓடிப்போ, நாம் பொறுக்கமாட்டோம்" என்றார்கள்; அப்போது புத்தகுரு அவர்களை நோக்கி, "உங்கள் சைவநெறி நிலையற்றதென வாதித்து புத்தனே உயர்ந்த தெய்மென்று சாதித்தல்லது யான் போகமாட்டேன்'' என்றான் இப்படிச் சொல்லக்கேட்ட ஆலயத்திலுள்ளோர் உடனே தில்லை மூவாயிரவருக்கும் மற்றையோர்க்கும் அவரவர் வீடுகளிற்போய்ச் சொன்னார்கள்; அதுகேட்ட தில்லை மூவாயிரவரும் மற்றையோரும் விரைவாகப் போய்ச் சபையை அடைந்து பௌத்த குருவைப் பார்த்து, "ஈடேறும்வகை யறியாத நீ இங்கே வந்ததற்குக் காரணம் யாது" என்றுகேட்க, புத்தகுருவானவன், ''வேதசாத்திரப் பிரமாணங்களைக்கொண்டு உங்கள் தெய்வமே தெய்வமென்று சொல்லுவீர்களானால், அதனைமறுத்து எங்கள் தெய்வமே தெய்வமென்று யான் சொல்லுவேன்" என்றான். அதைக் கேட்ட தில்லை மூவாயிரவர் "உன்னோடு பேசுவது சேற்றிற் கல்லெறிவது போலாகும், ஆதலால் உன்னைத் தகுந்த அறிஞர்களைக்கொண்டு வெல்வோம்" என்று சொல்லிச் சோழராஜனுக்கு ஒரு ஓலை யெழுதியனுப்பி, தபோதனர்கள் முதலானவர்களும் நாளைச் சிதம்பரத்தில் நடராஜமூர்த்தியைத் தரிசனஞ் செய்தற்கு வந்து சேர

வேண்டுமென்று ஓலையெழுதி யனுப்பினார்கள்; சூரியன் அஸ்தமித்தான்.

அன்றிரவு தில்லை மூவாயிரவர் முதலானவர்கள் தங்கள் தங்கள் வீடுகளிற் சென்று உறங்கும்போது, பொன்னம்பலத்தில் நிருத்தஞ் செய்கின்ற கடவுளானவர் திருக்கரத்திற் பிரம்பு பரித்து, நீண்டசடை முடியும் நீறணிந்த திருமேனியும் உடையவராய், ஆதி சைவவேதியர் வடிவங்கொண்டு எழுந்தருளி எல்லாருடைய கனவிலும் வந்து, "நீங்கள் வருந்துவதை ஒழியுங்கள்; நமது தில்லையெல்லையில் திருவாதவூரன் இருக்கிறான்; அவன் இந்தச் செய்தியைக் கேட்டால், புத்தர்களைத் தர்க்க சாஸ்திரத்தைக்கொண்டு ஒரு நொடியில் வெல்லுவான்; ஆதலால் அவனை நீங்கள்போய் இப்பொழுதே அழைத்துவாருங்கள்" என்றருளி மறைந்தனர்.

தில்லை நகரத்தார் எல்லாரும்கோயில் மண்டபத்திலே வந்துசேர்ந்து புத்தகுரு சொன்ன சொல்லுக்கு இரங்கி, பின்பு கருணையினாலே கடவுளானவர் தம் கனவிலே வந்து சொன்ன சொல்லினால் முகமலர்ச்சியுடையவராய், இராக் காலத்தில் தாங்கள் கண்ட கனவை ஒருவரோடு ஒருவர் சொல்லிக்கொண்டு மெய்த்தவத்தையுடைய திருவாதவூரர் இருக்குமிடத்துக்குப்போய் அவரைக்கண்டு, செய்தியைத் தெரிவித்தார்கள். அதைக் கேட்ட திருவாதவூரர், முன்னே கடவுள் தமக்குச் சொன்னதை நினைந்து தில்லைவாழ்ந்தணருடனே விரைவாகப் போய்ச் சபாநாயகரை வணங்கி, அவருடைய அருள்பெற்றுப் புத்தர்களிருக்கும் மண்டபத்திற்போய், அவர்களுடைய முகத்

தைப் பார்த்தால் தீமையுண்டாமென்று திரை இடு வித்து, அதன் மறைவில் ஒரு ஆசனத்தில் எழுந்தருளி யிருந்தார், அப்போது சோழராஜனும் சீக்கிரமாய் வந்து சபாநாயகரைத் தரிசித்து, மண்டபத்தில் வந்து, திருவாதவூரரை வணங்கி, அவருக்குப் பக்கத்திலே ஒரு ஆசனத்திலிருந்தான். ஈழதேசத்தரசனும் சோழ ராஜனை வணங்கி அங்கேயிருந்தான். எல்லாரும் சூழ்ந் திருக்கும் சபையில் நடுச்சொல்வோர்கள் பக்கத்தி லிருந்தார்கள்; தில்லை மூவாயிரவரும், முனிவரும் வந்து சேர்ந்தார்கள்; அந்தச் சமயத்திற் சோழராஜன் திருவாதவூரருடைய திருவடிகளை வணங்கி, 'சுவாமி, உலகத்திலே சிவஞானநிலையை நிறுத்துவது உமது கடன், புத்தரைத் தண்டிப்பது என்கடன்" என்றான்.

இப்படிச் சோழராஜன் 'சொல்ல, திருவாதவூரர் புத்தனைப் பார்த்து, "நீ வந்த காரணத்தைச் சொல்" என, புத்தன் "எங்கள் தெய்வமல்லாமல் வேறு தெய்வ மில்லை யென்று தாபித்து இங்கே எல்லாருங் காணும் படி, இப்பொன்னம்பலத்திலே எங்கள் புத்தரை வைக்க விரும்பி நேற்றே வந்துள்ளேன்; இதுதான் நான் வந்த காரணம்" என்றான். இதைக்கேட்ட திருவாதவூரர் புன்னகைசெய்து, "புத்தனே, உன் தெய்வத்தின் வர லாற்றையும், ஆன்மாக்கள் அவனடியிற் சேரும் வர லாற்றையும் சொல்வாயாக" என்றார். அதற்குப் புத்த குருவானவன் கோபங்கொண்டு, "கண்ணில்லாதவ னுக்குச் சூரியகிரணத்தின் ஒளியைக் காட்டக்கூடுமோ? எங்கள் புத்ததேவனுடைய கீர்த்தியைச் சொல்ல வேண்டுமானால் அநேகமாயிரம் நாக்கள் வேண்டும். எமது கடவுளானவர் தருமம் விளங்குகின்ற நமது பிடகாகமத்தைச்செய்து, அநேக யோனிகள்தோறும்

பிறந்து ஆன்மாக்களுக்கு உறுதிசெய்து, கொலை, களவு, பொய் கள்ளுண்டல் என்னும் நான்கு குற்றங்களையும் நீக்கி, மேன்மையுள்ள வெள்ளரசமர நிழலிலே சேர்ந்து வீற்றிருப்பார். கருப்பத்திற் சேருகின்ற உருவம், வேதனை, குறிப்பு, பாவனை. விஞ்ஞானம் ஆகிய பஞ்சகந்தங்களும் கூடி, ஒழிவில்லாத அநேக அறிவுண்டாய் நீங்குவது பிறவித்துன்பமாம்; அது நீங் கக் கேடாயழிவது முத்தியாம்" என்று சொன்னான்.

அப்போது திருவாதவூரர் சோழராஜனுடைய முகத்தைப் பார்த்து, "இப்புத்தகுருவுக்கு நாம் சொல்வதுயாது," என்று பின்பு, புத்தன் சொன்ன பிடகாகம முதலியவற்றிலுள்ள குற்றங்களையெடுத்துச் சொல்லிக் கண்டித்துச் சிவபெருமானது பெருங்கீர்த்தி யையும் சைவ நெறியின் பெருமையையும் விரித்துச் சொன்னார்; கேட்ட புத்தகுரு மீளவும் திருவாதவூரரை நோக்கி "உங்களுடைய கடவுள் முற்காலத்திற் கல்லா லின் கீழிருந்து தருமத்தைச் சொன்னதாகச் சொன்னீர்; ஆனால் அவர் கையிலே செபமாலையைக் கொண்டிருப் பது தன்னைவிட வேறொரு தெய்வமுண்டென்று நினைத்தோ, சொல்லும்; உலகத்தார் வணங்கும்படி இச் சிதம்பரத்திலே நிருத்தம்பண்ணுவார் என்று சொன்னீர்; நல்லறிவை யுடைய சிலர் பார்க்க ஆடுவ தல்லது தமது இச்சையினாலே ஆடுவாரு முண்டோ? சொல்லும்; உலகமெல்லாம் பிழைக்கப் பொன்னம் பலத்திலே நிருத்தம்பண்ணுகிற உமது கடவுள் திரு மேனியில் விபூதி தரித்திருக்கிறார் என்று சொன்னீர்; சிவந்தவொளியுள்ள திருமேனியிலே விபூதியைத் தரித் தது. தம்மேனியைக் காட்டிலும் விபூதி பரிசுத்தமான தென்று நினைத்தோ? உமாதேவியை ஒரு பாகத்தில்

உடையவரென்று சொன்னீர்; பாதியுடம்பு பெண் வடிவா யிருப்பது உலகத்திலுண்டோ? அப்படி உமது கடவுளது பாதியுடம்பு பெண்வடிவா யிருக்கையில், நீர் துறவிற் பொருந்தியிருப்பது யாதுக்கு? சொல்லும்" என்று இப்படிப் பலவாருக வினவினுன்.

திருவாதவூரர் இகழ்ச்சிநகை செய்து, "நல்ல உபதேசமாகிய இதனைத் தவமொன்றுமில்லாத உன்னெதிரே சொல்லத்தகாது" என்று சொல்லி, மேலும் சொல்லுவார், "எமது கடவுள் கையிலே செபமாலையை வைத்திருப்பது உலகத்தா ரெல்லாரும் இங்கே மேலான தவங்களைச் செய்தற்கென்று நினைக்குதி; அது எது போலவென்ருல், ஆயுதத் தொழிலைச் சீடருக்குப் பழக்குகின்ற ஆசிரியர் கையிலே ஆயுதத்தைக் கொண்டிருத்தல் போலாகும்; மேலும், ஊனக்கண்களை யுடையவராகிய உலகத்தார் காண எதிரே கூத்தாடுவா ரென்ருய், விறகிலே யிருக்குந் தீயைப்போலச் சரீரத்திற் கலந்து உயிர்களையெல்லாம் ஆட்டுகின்ற ஒரு நட்டுவனை நிகர்ப்பார் எமது கடவுள் என அறிகுதி; உம்முடைய கடவுள் விபூதியைத் தரித்ததென்னவென்று கேட்டாய், அது ஆன்மாக்களுக்குத் துன்பத்தைத் தணிப்பதென்று எண்ணிக்கொள்; எங்ஙனமெனில், குழந்தைகள் அடைந்த பிணியை நீக்குதற்குத் தாய் உட்கொள்ளும் மருந்து போலாகும்; வீண் வார்த்தைகள் பேசுகின்ற புத்த குருவே, திருநீற்றிலுள்ள சுகத்தை வேதம் சொல்லுவதன்றி மற்றொருவர் சொல்ல எளிதாமோ? உமா தேவியை ஒரு பாகத்தில் வைப்பது குற்றமென்ருய், அப்படி வைத்தது உலகத்தார்க்குப் போகத்தைத் தரல் வேண்டு மென்ற திருவுளக் கருத்தாகும்; அல்லாமலும், உயிர்களுக்கு யோகத்தைக் கொடுக்கும் பொருட்டு

யோகவுருவம் கொண்டிருக்கிறார் எங்கள் பரமபதி யென்பதை உணருதி; எங்கள் பரமசிவன், பூவிலிருக்கும் மணம்போல ஆன்மாக்களிடத்திற் கலந்து நின்ற நிலைமையை யுணர்தல் உன்னால் முடியாது; ஆதியாகியும், சிவயோகியாகியும், போகியாகியும், அருவாகியும், சோதியாகியும், பல்ரூபியாகியும், இன்பக்கடலாகியும் இருக்கின்ற கடவுள், துன்பமில்லாத பொன்னம்பலத்திலே நின்ற நிலையை யல்லாமல், எது சிரசு? எவை பாதம்? அவரை யறிவோர் யார்?'' என்றிப்படிப் பலவாறு சமாதானஞ் சொல்லி, சரசுவதியைக் கோபித்து, "கலைமகளே, நான்கு வேதங்களையும் சொல்லும் நீ இப்போது இந்தப் பொய்யைச் சொல்வதென்ன? தக்கன் யாகத்தில் முன்னர் உன் மூக்கறுக்கப்பட்டதை மறந்தனையோ? திரிநேத்திரத்தை யுடைய பரமசிவனது அருளில்லையென்று சொல்லுகின்ற மூவருடைய நாவை விட்டு, நீ சிவபெருமான் ஆணையின்படி நீங்குதி'' என்று மாணிக்கவாசகசுவாமிகள் ஆணையிட, சரஸ்வதியும் பயந்து, அங்குள்ள புத்தருடைய நாவினின்றும் நீங்கினள்.

அந்தப் புத்தர்களெல்லாரும் விஷத்தை யுண்டவர் போல் ஒடுங்கி நடுங்கி ஊமர்களானார்கள்; அச்சமயத்தில் ஊமைத்தன்மை யடையாத ஈழநாட்டரசன் இவைகளை யெல்லாம் கண்டு அச்சமும் அற்புதமுங் கொண்டு திருவாதவூரரை வணங்கி, "சுவாமீ, பேச்சில்லாத எனது ஊமைப் பெண் பேசும்படி பண்ணினால், நான் உமக்கு அடியனாவேன்'' என்று விண்ணப்பஞ் செய்தான். திருவாதவூரர் அந்த ஊமைப் பெண்ணைத் தம் முன்னிலையில் வருவித்து, அருள்நோக்கஞ் செய்து, தம்முன்னர் இருத்தி, "அங்கிருந்த புத்தன் கேட்ட வினாக்களுக்

கெல்லாம் நீ விடை சொல்" என்றார். அப்படியே அக்கன்னிகை கற்றறிந்தவர்போல விடை கூறினள். அதைத் திருவாதவூரர், திருச்சாழலாகப் பாடியருளினார். இந்த அற்புதத்தைக் கண்ட ஈழநாட்டரசன் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துத் திருநீற்றைத் தரித்துத் திருவாதவூரருக்குத் தொண்டனானன். சோழராசனும் தில்லை மூவாயிரவரும் பொன்னம்பலம் வாழ்கவென்று துதித்தார்கள்.

ஈழநாட்டரசன் திருவாதவூரருக் கடிமையானவுடன், "புத்தர்களெல்லாரும் ஊமைத்தன்மை நீங்க அருள்செய்யவேண்டும்" என்று அந்த அரசன் நாயனுரைப் பிரார்த்தித்தான். அப்படியே திருவாதவூரர் அவர்களைக் கிருபையோடு நோக்க, அவர்களுடைய ஊமைத்தன்மை நீங்கிற்று. உடனே அவர்கள் திருவாதவூரரை வணங்கி நின்று, "எம்முடைய சீவர வஸ்திரத்தைச் சுட்டெரித்து, விபூதி உருத்திராக்கம் காவியுடை யென்னு மிவைகளைத் தந்தருளுவீர்" என்று வேண்ட, அப்டியே திருவாதவூரரும் செய்தருளினார். பின்பு திருவாதவூரரும் தில்லைமூவாயிரவரும் சைவ சமயத்தை ஏற்றுக்கொண்ட பௌத்தர்களும், சோழ ராஜனும், ஈழநாட்டரசனும் கனகசபையை யடைந்து சபாநாயகரைத் தரிசித்தார்கள். தில்லைநகரத்தார் எல்லாரும் "ஐயரே, நீர் எந்நாளும் இங்கே யிரும்" என்று பிரார்த்தித்துத் தங்கள் தங்கள் வீடுகளுக்குப் போனார்கள். சோழராஜனும் தன் மாளிகையை யடைந்தான். ஈழதேசத்தரசனும், தங்களுடைய தீவினைக ளெல்லாம் நீங்கப்பெற்ற பௌத்தர்களும் சிதம்பரமே தங்கள் வாசஸ்தானமாகக் கொண்டு அங்கே வாழ்ந்திருந்தார்கள்.

## திருவடி பெற்றமை

இங்ஙனம் பௌத்தர்களைச் சமயவாதத்தில் வென்ற பின் மாணிக்கவாசகசுவாமிகள் திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பதிகம், யாத்திரைப்பத்து என்னுந் திருவாசகங்களைப் பாடியருளி, தமது அக தரிசனத்துக்கு அகப்படும் அறிவுருவாகிய சிவத்தை ஓரொருகால் மறந்து தேடுதலும், தேடியவழிக் காணாது திகைத்தலும், பின்னர்க் கண்டு தெளிதலுமாகிய ஆன்ம போதச் சேட்டைகளைப் பொருந்தி அவற்றால் துன்புறுத லில்லாதவராய்ச் சதாதரிசனமெனப்படும் பேரின்ப வாழ்வையுடைய சிவஞானச்செல்வராயினார். சிதம்பர தலமே மேலாகிய சிவலோகமென்பதை அவர் தமது அநுபூதியிற் கண்டு தெளிந்தார்.

மாணிக்கவாசகசுவாமிகள் இவ்வாறு சிவயோக சாதனை செய்து கொண்டிருக்கையில், பொன்னம்பலத்தில் தாண்டவஞ் செய்தருளும் நடராஜப்பெருமானார் ஆன்மாக்கண்மீது கொண்டுள்ள பேரருள் காரணமாக, ஒருநாள்பூணூல் விளங்குந் திருமார்பும் வெள்ளேடு பொருந்திய திருக்கரமுமாகப் பிராமண வடிவங் கொண்டு, தமது அருமைத் திருவடிகள் நிலத்திற் பொருந்த நடந்தருளித் திருப்புலீச்சரத்திற்குச் சென்று திருவாதவூரடிகட் கெதிரே நின்றார்.

திருவாதவூரடிகள் தமக்கெதிரே நிற்கும் சிவப் பிராமணரை நோக்கி முகமலர்ந்து, “ஐயரே, இப்படி இரும்” என, அவர் ஒரு ஆசனத் திருப்ப, “வேதியரே, நீர் எங்கிருப்பது” என்று வினவ, சிவமறையவர் “நாம் வசிப்பது பாண்டிநாடு” என்று சொல்ல, கேட்ட

அடிகள் மிக்க பரிவுடையவராய் "மறையவரே, நீர் இப்பொழுது இங்கே வந்த காரணம் யாது" என வினவ "உம்மைத் திருப்பெருந்துறையில் அடிமை கொண்டருளிய ஆன்மநாதசுவாமியின் ஆஞ்ஞைப்படி இங்கே வந்தோம்; சோமசுந்தரக்கடவுளை வேதமாகிய வெண்பரியின்மீது நீர் எழுந்தருளச்செய்த மகா விசேடத்தினாற் பாண்டிநாடு எவ்வகையான குறைவுமின்றி வாழ்வோடு கூடியிருக்கின்றது; நீர் திருப்பெருந்துறையினின்றும் புறப்பட்டுத் திருக்கழுக்குன்ற மெனப்படும் திவ்விய ஸ்தலத்தைத் தரிசித்துக்கொண்டு, இச் சிதம்பரத்தை யடைந்து, இங்கே சமயவாதஞ்செய்யவந்த புத்தர்களை வென்றீர் என்ற இந்த வரலாறுகளை யெல்லாங் கேள்வியுற்றுப் பாண்டிநாட்டார் மிக்க மகிழ்ச்சியுடன் இருக்கின்றார்கள். இனி, நாம் இங்கே இப்பொழுது வந்த காரணத்தைச் சொல்லுகின்றோம்; நீர் இறைவன்மீது பத்திமேலீட்டினாற் பாடிய அதிஅற்புத மதுரவாசகமாகிய திருவாசகத்தை ஏனைய ஆன்மாக்களும் படித்து ஈடேறுதல்வேண்டும்; ஆதலால் இத் திருவாசகங்களை நீர் சொல்ல நாம் எழுதலாமென எண்ணி வந்தோம்" என்று சிவப்பிராமணர் கூறியருளினர்.

அச் சிவவேதியர் திருவாக்கின்வண்ணம் மாணிக்கவாசகசுவாமிகள் அனலிடைப்பட்ட மெழுகென மனமுருக, தாம்பாடிய திருவாசகங்களையெல்லாம் முறையே சொல்ல, அம்பலத்தாடும் ஐயர் தமது அருமைத் திருக்கரங்களில் ஏடு எழுத்தாணி என்னுமிவைகளைப் பரித்தவராய், அவற்றையெல்லாம் எழுதி முடித்தார். எழுதி முடித்தபின் சிவப்பிராமணர் மணிவாசகரைப் பார்த்து, "அன்பரே, சிவகாமசுந்தரி சமேதராகிய நடராஜப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ஒரு

கோவை பாடவேண்டும்" என்று கேட்ப, அடிகளும் அதற்கியைந்து திருக்கோவையாரைப் பாட ஐயரும் உடனே எழுதி முடித்தார். எழுதி முடித்தபின் ஏட்டையுங் கொண்டு ஐயர் மின்னல் மின்னி மறைந்தாற் போல், உடனே மறைந்தருளினார்.

தமக்கெதிரே யிருந்து தாம் சொல்லச் சொல்லத் திருவாசகந் திருக்கோவையாரென்னு மிவைகளை எழுதிய ஐயர் மின்னென மறைந்தமையைக் கண்ட மணிவாசகப் பெருமான் திகைத்தார்; உடனே எழுந்து ஓடிச்சென்று எங்குந் தேடினார்; கண்டிலர். சிறிது சிந்தித்தார்; "இங்கே எழுந்தருளி வந்தவர் எம்பெருமானென்பதை முந்தி அறிந்திலேனே; சுவாமீ! என்னைத் தன்னந்தனியே விட்டு எங்கே ஒளித்திருக்கின்றீர்" என்று கண்ணீர் பொழிந்தார்; மண்மேல் விழுந்து புரண்டார்; பின்னரெழுந்தார்; பரந்த சிவானந்தமாகிய சமுத்திரத்திற் படிவாராயினர்.

இவ்வாறாக, கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியாகிய நடராசப்பெருமானார் உடனே கனகசபையை அடைந்தருளி, ஆங்குத் தம்மைத் தரிசிக்கும் வண்ணம் வந்துள்ள அரிபிரமேந்திராதி தேவர்களை நோக்கி "எமது அடியவனாகிய வாதவூரன் பாடிய இந்த இனிய பாடல்களைக் கேளுங்கள்" என்று திருவாசகம் திருக்கோவையார் என்னும் இரண்டினையும் அத்தேவர்கள் கேட்கும்படி திருவாய்மலர்ந்தருளினர்; அதன்பின் சபாநாயகர் திருக்கோவையாரின் இறுதியில் "வாதவூரன் சொல்லப் பொன்னம்பலவன் எழுதியதாகும்" எனத் தமது அருமைத் திருக்கரத்தினால் வரைந்து, திருமுறையைச் சேமித்து, மாணிக்கவாசகசுவாமிகளின் மெய்யன்புத் திறத்தை ஆன்மகோடிகள் உணர்ந்து உய்யவேண்டு

மென்ற திருவுள்ளக் குறிப்பினூற் பொன்னம்பலத்துள்ள பஞ்சாக்கரப் படியில் வைத்தருளினர்.

அடுத்தநாள் புலரிக்காலப்பூசை செய்யும்வண்ணம் அங்கு வந்த ஆதிசைவர், பஞ்சாக்கரப் படியில் ஒரு ஏடு இருப்பக் கண்டு ஆச்சரிய மடைந்து, அது தைவிக மென நினைந்து உடனே சிதம்பரவாசிகட்கெல்லாம் அந்தப் புதுமையைத் தெரிவித்தார் பூசை செய்யும் அந்த வேதியர் சொல்லக் கேட்டாரெல்லாரும் விரைவிற் பொன்னம்பலத்தை யடைந்து பார்த்தபோது பஞ்சாக்கரப் படியிற் புத்தக மிருக்கக் கண்டு அகாலத்திலே அரிபிரமேந்திராதி தேவர்களும் இங்கு அணுகுதல் அசாத்தியம்: ஆதலால் இது தெய்வீகமாக இருத்தல் வேண்டும்" என மதித்து, "இத்திருமுறை வடமொழியிலுள்ள சைவாகமமோ, இன்றேற் செந்தமிழ் நூலோ என்பதை அறிவேம்" என்றனர் அங்கு நின்றோருள் ஒரு அன்பர், பெரியோர் சொற்படி மலர் கொண்டு அத்திருமுறையை அருச்சித்து எடுத்துக் கட்டவிழ்த்து, சிவபுராணம், கீர்த்தித்திருவகவல் முதலிய நான்கு திருவாசகங்களையும் ஓதினூர் எல்லோரும் அற்புதத்துடன் மனமுருகக் கேட்டுக்கொண்டு நின்றனர். அந்த அன்பர் எஞ்சிய திருவாசகங்களையும் திருக்கோவையாரையும் ஓதி முடித்தார். முடிவிடத்து "வாதவூரன் சொல்ல, பொன்னம்பலவன் எழுதியதாகும்" என்று வரைந்திருப்பக் கண்டு, எல்லாரும் நடராஜப்பெருமானின் பேரருட்டிறத்தை வியந்து மனமுருகினர்.

பொன்னம்பலத்தின் கண்ணே கூடிய அன்பர்களெல்லாருந் திருவாசகந் திருக்கோவையாரென்னுமிரண்

டினையுங் கேட்டு "வீட்டு நெறிக்கு இனிச் சிவநூல் வேறும் வேண்டுமோ" என வியந்துகொண்டு "இவற்றின் பொருளை அந்த மாணிக்கவாசகசுவாமிகளே சொல்ல, நாம் நேரிற் கேட்போம்" என்று கூறி அவருடைய பன்னசாலையை அடைந்தனர். அடைந்தவர்கள் திருமுறையை மாணிக்கவாசகசுவாமிகள் முன்னிலையில் வைத்துவிட்டு, பொன்னப்பலவர் செய்த திருவிளையாடலைச் சொன்னார்கள். உடனே மாணிக்கவாசகசுவாமிகள் மனம் நெக்குநெக்குருக உரோமஞ் சிலிர்ப்ப ஆனந்தபாஷ்பஞ்சொரிய நின்று "சுவாமீ, நாயேனுடைய புன்பாடலையும் தேவரீர் ஏற்றருளத் தமியேன் என்ன புண்ணியஞ் செய்தேனோ" என்றார். அப்பொழுது அங்கு நின்றோர் "சுவாமீ, திருப்பாடலின் பொருளை அடியேங்களும் அறியும்வண்ணம் நீரே சொல்லல் வேண்டும்" என்று பணிவுடன் கேட்ப, மாணிக்கவாசகசுவாமிகள் மிக்க மகிழ்ச்சி யுடையவராய், "நீவிரெல்லீரும் வாருங்கள்; நாம் அந்தப் பொன்னம்பலத்துக்குச் சென்று அங்குத்தானே இவற்றின் அர்த்தத்தைச் சொல்லிவிடுகின்றோம்" என்று அவர்களையும் அழைத்துக்கொண்டு கனகசபையை அடைந்தார். அடைந்தமாத்திரத்தே மாணிக்கவாசகசுவாமிகள் "இந்த நடராஜப் பெருமானே எமது பாடலிற் பிரதிபாதிக்கப்பட்ட தத்துவப் பொருள்" என்று சுட்டிக் காட்டிக்கொண்டு கனகசபையின் கண்ணே பிரவேசித்தார். நடராஜமூர்த்தி தமது மெய்யன்பரைப் பாலுடன் கலந்த நீர்போல் தம்முடன் இரண்டறச் சேர்த்தருளினார். சரியையாளர், கிரியையாளர், யோகிகள், ஞானிகள் எனப்படும் இவர்களும், சிதம்பரவாசிகளெல்லோரும் திருவாசகந் திருக்கோவை

யார் எனப்படும் திவ்விய பிரபந்தங்களின் மெய்ப் பொருளைத் திருவருளின் திறத்தால் உணர்ந்தார்கள்.

## சந்தான குரவர்

"முத்தாந்த வித்தே முளைக்கு நிலமாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே".

சைவ சந்தான குரவராவார் சைவசமயத்தின் வழியைக் குரு சீட கிரமமாக விளக்கிக் காட்டுபவர். சந்தானம் என்பதற்குத் தொடர்ச்சி யென்பது பொருள். இச் சந்தானத்திற்கு முதல்வர் திருநந்தி தேவராவர். சைவசமய குரவர்களைப்போலவே, சந்தானகுரவரும் நால்வராவர்; சந்தானகுரவர் சமயகுரவர் காலத்திற்குப் பிற்பட்டவர்கள். சமயகுரவர் செய்தருளிய தேவார திருவாசகங்களாகிய சிவாநுபூதித் திருமுறைகளுக்கு இச் சந்தானகுரவர்கள் கண்ட சித்தாந்த சாஸ்திரங்கள் இலக்கணம் போன்றவை யெனலாம். சந்தான குரவர்கள் நால்வராவார்: மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியார், மறைஞானசம்பந்த சிவாசாரியர், உமாபதி சிவாசாரியர் என்னு மிவர்களேயாவர். இந் நால்வரும் சிவாகமக் கருத்துக்களைத் தமிழில் திருவருளின் துணை கொண்டு தருக்க முறைக்கியைய இயற்றிய பெரியர்களாவர். இவர்கள் செய்த சித்தாந்த சாஸ்திரங்களாவன: (1) திருவுந்தியார், (2) திருக்களிற்றுப்படியார், (3) சிவஞானபோதம், (4) சிவஞான சித்தியார், (5) இருபா இருபஃது, 6) உண்மை விளக்கம், (7) சிவப்பிரகாசம், (8) திருவருட்பயன், (9) வினாவெண்பா, (10) போற்றிப் பஃறொடை, (11) கொடிக்கவி, (12) நெஞ்சுவிடு தூது, (13) உண்மைநெறி விளக்கம், (14) சங்கற்ப நிராகரணம் என்பனவாம்.

## மெய்கண்டதேவர் வரலாறு

"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ".

விருத்தாசல மெனவும் திருமுதுகுன்ற மெனவும் வழங்கப்படும் சிறந்த சிவதலத்திற்குச் சமீபத்தில் திருப்பெண்ணாகடம் என்னும் சிவத்தலம் ஒன்றுண்டு; அத்தலம் திருத்தூங்கானை மாடம் என்றுஞ் சொல்லப்படும். அத்திருப்பதியிலே சைவ வேளாளர் மரபிலே அச்சுதகளப்பாளர் என்னும் ஒருவர் இருந்தார். அவர் தமக்குப் பன்னாளாகப் பிள்ளைப்பேறில்லாமையாற் கவலை கொண்டு, தமது குலகுருவாகிய திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியரை அடைந்து, தம் குறையை முறையிட்டு அக்குறையை எவ்வாறு நீக்கலாமெனத் தம் குருவைப் பணிவுடன் கேட்டார். அப்போது அருணந்தி சிவாசாரியர் தேவாரத் திருமுறையைப் பத்தியோடு அர்ச்சித்து அதன்கண் கயிறுசாத்திப் பார்த்தலும்,

திருச்சிற்றம்பலம்

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே".

திருச்சிற்றம்பலம்.

என்னும் சம்பந்தசுவாமிகள் பாடியருளிய தேவாரமே புலப்பட்டது; அத் திருப்பாட்டில் திருவெண்காட்டிலுள்ள முக்குள நீரில் மூழ்குவோர்க்கு, பிள்ளைப் பேறும் அவர்கள் விரும்பும் ஏனைய செல்வங்களும் கைகூடுமென்ற கருத்தமைந்திருத்தலின், அருணந்தி சிவாசாரியர், தமது சீடராகிய அச்சுதகளப்பாளரைத்

திருவெண்காட்டிற்குச் சென்று முக்குள நீரில் முழுகி, அத்தலத்திற் கோயில்கொண்டருளிய பெருமானையும் பிராட்டியையும் வழிபடும்வண்ணம் கட்டளையிட்டார்; குருவினுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு அச்சுத களப்பாளர் தமது மனைவியாரோடு திருவெண்காட்டை யடைந்து முக்குளநீரென்னுந் தீர்த்தத்தில் மூழ்கித் திரு வெண்காட்டுப் பெருமானையும் விதிப்படி வழிபட்டு, தம்மாலியன்ற தருமங்களையும் செய்து வரலாயினர். அங்ஙனம் ஓராண்டு அச்சுதகளப்பாளர் அத்தலத்தில் வசிக்குங்காலத்து, திருவெண்காட்டீசுவரர் ஒரு நாள் அவருக்குச் சொப்பனத்திற் றோன்றி, "அன்பனே, இப் பிறப்பில் உனக்கு மகப்பேறில்லையே" எனத் திருவாய் மலர்ந்தருள, கேட்ட அச்சுதகளப்பாளர் மனம் வருந்தி, "சுவாமீ! திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருப் பாட்டை நம்பி இத்தலத்தில் வந்து தவங்கிடக்கின்றேன். அத்திருப்பாடல் பொய்யாமைப்பொருட்டு இப்பிறப்பிற் றானே அடியேனுக்கோர் நற்புதல்வனைத் தந்தருளல் வேண்டும்" என்று மீட்டும் இரந்தார். பெருமான் அந்த அன்பருடைய விண்ணப்பத்திற்குத் திருவுளமிரங்கி, "ஞானசம்பந்தன் போன்ற ஓர் பிள்ளையை நீ பெறுவா யாக" என்று கூறியருளினர். அத்திருவாக்கைக் கேட்ட அச்சுதகளப்பாளர் எல்லையில்லா உவகையெய்திக் கண் விழித்தனர்; பெருமான் தம்மீது வைத்த கருணையை நினைந்து நினைந்து உள்ளமுருகிப் பின்னரும் அத்தலத் திற்றானேயிருந்து இறைவனை வழிபட்டு வருவாராயினர்.

பின்னர் அச்சுதகளப்பாளர் தமது மனைவியார் கருப்பவதியானதை யுணர்ந்து பத்து மாசங்களிலும் செய்யவேண்டிய சடங்குகளை விதிப்படி செய்துவந்தார். பத்தாமாசம் மெய்கண்டதேவராகிய அக்குழந்தையார்

சுபவேளையிலே உதித்தருளினர். அக்குழந்தைக்கு, திரு வெண்காட்டுப் பெருமானுடைய திருவருளினுற் பிறந்தமையினுலே சுவேதவனப் பெருமாள் என்னும் பெயரைப் பெரியோர்கள் இட்டார்கள். அச்சுதகளப்பாளர் திருவெண்காட்டுப் பெருமானிடத்தில் விடைபெற்றுக் கொண்டு தமது மனைவியாரோடும் குழந்தையோடும் திருப்பெண்ணுகடத்திற்கு மீண்டு வந்து தம்மில்லத்திலிருந்து வாழ்வாராயினர். சுவேதவனப் பெருமாள் முற்பிறப்பில் ஈட்டி வைத்திருந்த சிவஞான முதிர்ச்சியினுற்போலும், தமது இரண்டாம் வயதளவிலே பரிபக்குவநிலையை யடைந்தார். அவர் திருவெண்ணெய்நல்லூரிலிருந்த காலத்து, சநற்குமார முனிவரது ஞானப்புதல்வராகிய சத்தியஞான தரிசனிகளிடம் உபதேசம் பெற்ற பரஞ்சோதி முனிவரென்பவர், அக்த்திய முனிவருடைய வாசஸ்தானமாகிய பொதியமலையை நோக்கிச் செல்லும் மார்க்கத்தில், திருவெண்ணெய் நல்லூரை யடைந்தார். இறைவனுடைய திருவுள்ளக் குறிப்பை யுணர்ந்த பரஞ்சோதியார், அத் திருவெண்ணெய் நல்லூரிலிருக்கும் சுவேதவனப் பெருமாளைக் கண்டு அவருக்கு ஞானுபதேசஞ்செய்து மெய்கண்டார் என்னும் பெயரையும் இட்டார்.

மெய்கண்டார் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளிய பொல்லாப் பிள்ளையாரிடஞ் சென்று வணங்கித் துதித்து, அப்பிள்ளையாருடைய திருவருளினுலே சகல கலைகளையு முணர்ந்து சிந்தித்துத் தெளிவாராயினர்; அவற்றின் பயனுகவே சிவஞானபோதம் எனப்படுஞ் சிறந்த சைவசித்தாந்த சாஸ்திரத்தை இயற்றியருளினர். அச் சிவஞானபோதத்தின் நுண்பொருளைப் பக்குவம்

வாய்ந்த நாற்பத்தொன்பது மாணவர்களுக்கு மெய்கண்ட தேவர் போதித்தருளினார்

அந்த நாற்பத்தொன்பதின்மரது பரம்பரை மூலமாகவே தமிழ்நாடெங்கும் சைவ சித்தாந்த உண்மைகள் பரவுதலாயின. தமிழ் நாட்டிலே ஆதீனங்கள் எனப்படும் திருமடங்கள் தோன்றி நிலைபெறுதற்குக் காரணர்களாக வுள்ளவர்களும் மேலே சொல்லப்பட்ட மாணவ பரம்பரையினரேயாவர். முதன் மாணவர் பரம்பரையிலே தோன்றி விளங்கிய நமச்சிவாய தேசிகர் நிலை நாட்டிய திருமடம் திருவாவடுதுறை ஆதீனமாகும். அந்தப் பரம்பரையிலேயே தோன்றிய ஞானசம்பந்த தேசிகர் ஸ்தாபித்த திருமடம் தருமபுர ஆதீனமாகும். மெய்கண்ட தேவருடைய மாணவருள் தலையாக விளங்கியவர், அத்தேவருடைய தந்தையார்க்குக் குலகுருவாயுள்ள அருணந்திசிவாசாரியராவர். அந்த வரலாற்றை அருணந்திசிவாசாரியர் வரலாற்றிற் காண்க. பதினன்கு சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றாயுள்ள உண்மை விளக்கத்தைச் செய்தருளிய மனவாசகங் கடந்தவரும், சிற்றம்பலநாடிகள் என்னும் பெரியாரும் மெய்கண்ட தேவரைத் தம் குருவாகக் கொண்டவர்கள். மெய்கண்ட தேவர் இங்ஙனம் தமது மாணுக்கர் பலருக்குச் சைவ சித்தாந்த உண்மைகளைப் போதித்தபின்னர், சமாதி நிலையுற்று ஐப்பசி மாதத்துச் சோதி நட்சத்திர தினத்திற் சிவபெருமானுடைய திருவடிகளை அடைந்தனர்.

## அருணந்திசிவாசாரியர் வரலாறு

"பாதி விருத்தத்தால் இப்பார் விருத்தமாக வுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ".

அருணந்திசிவாசாரியர் மெய்கண்டதேவருடைய முதன் மாணுக்கராவர். இப்பெரியார் நடுநாட்டிலே யுள்ள திருத்துறையூரிலே வாழ்ந்தவர். ஆதி சைவப் பிராமண குலத்தினர். வேதசிவாகமங்களை ஐயந்திரி பறக் கற்றுணர்ந்தவர். இதனுற் சகலாகம பண்டித ரென்னும் காரணப் பெயரையும் பூண்டவரானுர். தமிழ் வேதமாகிய தேவார திருவாசகங்களைப் பத்தியோடு பயின்றவர். இச் சிவாசாரியர் தம்மை வந்தடைந்த பக்குவம் வாய்ந்த பல மாணவர்களுக்கு ஞான நூல் களைப் போதித்துச் சைவநெறியை நிலைநாட்டினுரெனச் சொல்லப்பட்டிருக்கின்றது.

அருணந்திசிவாசாரியர் சரியை கிரியை, யோகங் களிலே சிறந்தவராய் விளங்கிய காலத்து. தமது மாணுக்க ராகிய அச்சுதகளப்பாளரின் தவப் புதல்வராகிய மெய் கண்டார் தமது சிறு பிராயத்திற்றனே மாணவர் பல ருக்கு ஞான நூல்களைக் கற்பிக்கின்ருரென்பதைக் கேள்வியுற்று வியப்படைந்தார். அவ்வாறு வியப் படைந்த அவர் முந்தியே சில மாணவரைத் திருவெண் ணெய்நல்லூருக்குச் செல்லவிடுத்துப் பின்னர்த் தாம் தமது விருதுகளோடும் பரிவாரங்களோடும் ஆங்குப் புறப்பட்டுச் சென்ருர். அருணந்திசிவாசாரியர் வரவைக் கண்டு, திருவெண்ணெய்நல்லூரில் வாழும் சைவ வேளாள ரனைவரும் பலவாறு அவரை உபசரித்தனர். ஆனுல் மெய்கண்டதேவர் மாத்திரம் அருணந்தியார் வரவைக் கண்டும் அவரை எதிர்கொண்டு உபசரித்த லின்றி வாளாவிருந்தனர். அதை யுணர்ந்த சிவாசாரியர் மெய்கண்டார் முன்னிலையிற் சென்று, அவர் தம் முடைய மாணவர்க்கு ஆணவமலத்தினியல்பை எடுத்து விளக்குவதைக் கேட்டு அகந்தையும் சினமுங்கொண்

டாராய் மெய்கண்டாரை நோக்கி, "ஆணவமலமாவது என்ன?" என்று அதட்டிக் கேட்க, மெய்கண்டதேவர் புன்னகை தோன்ற அருணந்தியாரைப் பார்த்துத் தம் விரலால் அவரைச் சுட்டிக்காட்டி, "நீர் நிற்கின்ற உந்த நிலைதான் ஆணவத்தின் நிலை" என்று கூறியருளினார், மெய்கண்டார் கூறிய அந்த வாக்கே அருணந்திசிவாசாரியருக்கு மந்திர உபதேசமாக, அவர் தம்மை அது காறும் பந்தித்திருந்த மலவிருள் அகலப்பெற்றவராய் உண்மையை யுணர்ந்து மெய்கண்டாருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கித் தம்மைச் சீடனாக ஏற்று ஞானோபதேசஞ் செய்யவேண்டுமென்று இரந்துநின்றார். மெய்கண்டதேவரும் அவருடைய பரிபக்குவநிலையை யுணர்ந்து, அவருக்குச் சிவஞானபோதப் பொருளை யுபதேசித்துத் தம்முடைய நாற்பத்தொன்பது மாணவருள் தலையாய மாணவராயிருக்கும் வண்ணஞ் செய்தருளினார்.

அருணந்திசிவாசாரியர் செய்த நூல்கள்; சிவஞான சித்தியார், இருபாவிருபஃது என்னு மிரண்டுமாம். சிவஞானசித்தியார் சித்தாந்தசாஸ்திரம் பதினான்கனுள்ளும் விரிவுடையதாய்ப் புறச் சமயத்தை மறுக்கும் பரபக்கமும், அகச்சமயத்தை விளக்கும் சுபக்கமு முடையதாகும். இவர் தமது ஞானாசாரியராகிய மெய்கண்ட தேவரைத் தாம் இயற்றிய சிவஞான சித்தியாரிற் பின்வருமாறு வாழ்த்தி யுள்ளார்:—

"என்னையிப் பவத்திற் சேரா வகையெடுத் தென்சித்தத்தே, தன்னைவைத் தருளினாலே தாளிணை தலைமேற் சூட்டும், மின்னமர் பொழில்சூழ் வெண்ணெய் மேவிவாழ் மெய்கண்டானால், சென்னியிற் கொண்டு சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றாம்".

அருணந்திசிவாசாரியர் சிலகாலஞ் செல்லத் தமது மாணக்கருள் உத்தமராகிய மறைஞானசம்பந்தசிவா சாரியருக்கு ஞானோபதேசஞ் செய்து, நிட்டைகூடி இறைவனடி சேர்ந்தார். அருணந்திசிவாசாரியர் குரு பூசைத்தினம் புரட்டாதிமாசம் பூரநாளாகும்.

### மறைஞானசம்பந்தசிவாசாரியார் வரலாறு

"சிற்றம்பல மென்னும் சின்மயராந் தில்லைநகர்க்
கோற்றங்குடி முதலைக் கூறுநா ளெந்நாளோ".

மறைஞானசம்பந்தர் திருப்பெண்ணாகட மென்னுந் தலத்திலே பிராமண குலத்திற் றோன்றியவர். பராசர முனிவர் கோத்திரத்திற் பிறந்தவராகிய இவர் இளமைப் பருவத்திலேயே வேதசிவாகமங்களைச் சந்தேக விபரீத மறக் கற்றுணர்ந்தார். இவர் அருணந்திசிவாசாரியரிடம் ஞானோபதேசம் பெற்று, பின்னர் சிதம்பரத்தைச் சார்ந்த திருக்காளாஞ்சேரியை அடைந்து அங்கே சில காலம் மௌனவிரதம் பூண்டிருந்தார். உமாபதி சிவாசாரியருக்கு ஞானோபதேசஞ் செய்த குருமூர்த்தி களும் இப்பெரியாராவர். பின்னரும் சிலகாலம் அத் திருக்காளாஞ்சேரி யென்னும் தலத்திலேயே இருந்து சிவத்தியானஞ்செய்து நடராசப்பெருமானுடைய திரு வடிகளை அடைந்தார். இவர் மாணக்கர் பலர்க்கு ஞானநூல்களைப் போதித்தன ரெனினும், தாமாகச் சைவசித்தாந்த நூலெதனையும் செய்ததாகப் புலப்பட வில்லை; இவர் முத்தியடைந்ததினம் ஆவணி உத்தர மாகும்.

### உமாபதி சிவாசாரியர் வரலாறு

"குறைவி லருண்ஞான முதல் கோற்றங் குடியடிகள்
நறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ".

சந்தானசாரியர் நால்வருள் ஒருவராகிய உமாபதி சிவம், தில்லைவாழந்தணர் மரபைச் சேர்ந்தவர்; இவர் சிதம்பரத்தைச் சார்ந்த கொற்றவன் குடியில் வசித்த மையால் கொற்றங்குடி முதலியார் எனப்பட்டார். இப் பெரியார் வேதசிவாகமங்களை ஐயந்திரிபறக் கற்றுத் தெளிந்தவர்; தமிழிற் புலமை வாய்ந்தவர்; சிவபத்தி யிலும் அடியார் பத்தியிலுஞ் சிறந்தவர்.

ஒருநாள் இவர் நடராஜப் பெருமானைப் பூசித்துத் திரும்பும்போது இவருக்கு அக்காலத்தில் ஏற்பட்ட சிவிகை தீவர்த்தி முதலான விருதுகளோடு வீதிவழியே சென்றனர். இவரது ஆடம்பரத்தைக் கண்ட திருப் பெண்ணாகடம் மறைஞான சம்பந்த சுவாமிகள் "பட்ட கட்டையிற் பகற்குருடன் போகின்றான் பாருங்கள்" என்று குறிப்பாகக் கூறினர். இதனைக் கேட்ட நாயனார் உடனே சிவிகையைவிட் டிறங்கி, மறைஞான சம்பந்தரை வணங்கி அவர்வழி ஒழுகுவாராயினர். மறைஞான சம்பந்தர், நாயனாரது அதிதீவிர பக்கு வத்தை உலகினர்க்கு வெளிப்படுத்துவான் கருதி, ஒரு நாள் புடைவை நெய்பவர் வீதியை யடைந்து, அவர்க ளில் ஒருவரிடம் கூழ் வாங்கி உண்டார். அவர் உண் ணுங்கால் அவரது முழங்கைவழியே ஒழுகிய சேடத்தை அருகே இருந்த உமாபதியார் ஏற்றுப் பேரானந்தத் துடன் பருகினர். இச்செயற்கருஞ் செய்கையை அறிந்த மற்றைத் தில்லைவாழந்தணர்கள், சுவாமிகளது நிலையை நன்குணராது அவரைப் பழித்தனரென்றும், சுவாமிகள் நடேசப்பெருமானைப் பூசிக்கவொட்டாது தடுத்தனரென்றுஞ் சொல்வர். சுவாமிகளிடம் திரு வருள் விளங்கியதென்பதற்குச் சான்று பகர்வன:—

(1) பெற்றான்சாம்பான் என்னும் சிவபத்த சிரோமணிக்குச் சபாநாயகரது "அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங் குடியாற் கெழுதிய கைச்சீட்டுப்—படியின்மிசைப், பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கை செய்து, முத்தி கொடுக்க முறை" என்னும் திருமுகப்படி முத்தி கொடுத்தருளினமையும், பின்பு அப் பெற்றான்சாம்பானுடைய மனைவியும் அரசன் முதலாயினோருங் காணப் பரிபக்குவமடைந்திருந்த ஒரு முள்ளிச் செடிக்கு முத்தி கொடுத்தருளினமையு மென்க.

(2) சிதம்பரதலத்தில் மார்கழி மாதத் திருவிழா ஒன்றிலே ஏறாது நின்ற கொடியைக் கொடிக்கவி என்னும் பிரபந்தம் பாடி ஏறச்செய்தமையுமாம்.

(3) இவர் இயற்றியருளிய சிதம்பரமான்மியத்துள் ஒன்றாகிய கோயிற்புராணம் அரங்கேற்றமுறாது பேடகத்துள் இருந்தபொழுது, தாம் உமாபதியார் பேடகத்துள் இருப்பதாகச் சபாநாயகர் தில்லைவாழந்தணர்களுக்கு அறிவித்தமையும், அவர்கள் சுவாமிகளிடம் வந்து புராணத்தை அரங்கேற்றச் செய்தமையுமாம்.

இயற்றிய நூல்கள்:—மெய்கண்டசாத்திரம் பதினன்கனுட் சுவாமிகளால் இயற்றப்பட்டன எட்டுநூல்கள். அவை சித்தாந்த அட்டகமென்று வழங்கப்படுகின்றன. அவற்றுட் சிவப்பிரகாசம் விரிந்தது; திருவருட்பயன் மிகச் சுருங்கியது; சங்கற்பநிராகரணம் பெயருக்கேற்ப மற்றைய மதங்களின் கொள்கைகளை நியாய வாயிலாகக் கண்டித்துச் சைவசித்தாந்தத்தின் ஏற்றத்தை நிலவச்செய்வது; உண்மைநெறிவிளக்கம் தசகாரியத்தைப் போதிப்பது, ஏனைய ஆங்காங்கே சித்தாந்தக் கருத்துக்களை விளக்குவன. இவர் இயற்றியருளிய பிற

நூல்கள்; கோயிற்புராணம், திருத்தொண்டர்புராண சாரம், சேக்கிழார்புராணம், திருமுறைகண்டபுராணம், திருப்பதிகக்கோவை, பௌட்கராகம வடமொழி வியாக்கியானம் முதலியன.

காலம் முதலியன :— சுவாமிகள் இற்றைக்கு 600 வருடங்களுக்குமுன் விளங்கியவர் என்பது அவர்களது சங்கற்ப நிராகரணத்தால் அறியக்கிடக்கின்றது.

மாணாக்கர் நமச்சிவாய தேசிகர் முதலியோர்; இவரே திருவாவடுதுறை ஆதீனத்தைத் தாபித்தவரென்ப.

சுவாமிகளது திருக்கோயில் கொற்றவன்குடியில் அமைக்கப் பெற்றுள்ளது.

சமயகுரவர் சந்தானகுரவர் சரித்திரச் சுருக்கம் முற்றும்.



# அநுபந்தம்

## நால்வர் செய்த அற்புதங்கள்

### திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லுமே
புத்த னூர்தலை தத்தெனத் தத்துமே
கனலில் ஏடிடப் பச்சென் றிருக்குமே
கதவு மாமறைக் காட்டி லடைக்குமே
பனையில் ஆண்பனை பெண்பனை யாகுமே
பழைய என்புபொற் பாவைய தாகுமே
சினஅரா விடந் தீரெனத் தீருமே
சிறந்த சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.

### திருநாவுக்கரசுசுவாமிகள்

தலைகொள் நஞ்சமு தாக விளையுமே
தழலில் நீறு தடாகம தாகுமே
கொலைசெய் ஆனை குனிந்து பணியுமே
கூர்அரா விடந் தீரெனத் தீருமே
கலைகொள் வேத வனப்பதி தன்னுளே
கதவு மீண்டு கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லு மிதக்குமே
அப்பர் போற்றும் அருந்தமிழ்ப் பாடலே.

### சுந்தரமூர்த்திசுவாமிகள்

வெங்கரா வுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை வாரண மீதில் இருத்துமே

மங்கை பாகரைத் தூது நடத்துமே
மருவி யாறு வழிவிட்டு நிற்குமே
செங்கல் லானது தங்கம தாகுமே
திகழு மாற்றிட்ட செம்பொன் னளிக்குமே
துங்க வாம்பரி சேரற்கு நல்குமே
துலங்கும் நாவலூர்ச் சுந்தரர் பாடலே.

### மாணிக்கவாசகசுவாமிகள்

பெருகும் வைகை தனை அழைப் பிக்குமே
பிரம்ப டிக்குப் பிரான்மேனி கன்றுமே
நரியெ லாம்பரி யாக நடத்துமே
நாடி மூகை தனைப்பேசு விக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண்சுமப் பிக்குமே
பரமன் ஏடெழு தக்கோவை பாடுமே
வருகும் புத்தரை வாதினில் வெல்லுமே
வாத வூரர் வழங்கிய பாடலே.

### நால்வர் வயசு

அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீகம்—இப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

### நால்வர், சேக்கிழார் குருபூசை நாட்கள்

பாடிய சம்பந்தர் வைகாசிமூலம் பயிலுமப்பர்
நீடியசித் திரைமாதச் சதயம்நிறை வன்றொண்டர்

ஆடியிற் சோதிதிரு வாதவூரர் நல்லானிமகம்
தேடிய சேக்கிழார் வைகாசிப்பூசஞ் சிறந்தனரே.

## சந்தானசாரியர் குருபூசை நாட்கள்

சித்திரை யத்த முமாபதி ஆவணித் திங்கடனில்
உத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்தர் ஓதுகன்னிச்
சுத்த மெய்ப்பூரம் அருணந்தி ஐப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

## சமயகுரவர் பெருமை

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

திருச்சிற்றம்பலம்.



